For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

• ஜூன் 2023 திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும் • விலை : ரூ 60 • இதழ் 37



ISSUE NO. 37

JUNE 2023 · $60.00

## Robert Caldwell

Missionary

WWW.CHRISTIANHISTORICALSOCIETY.IN

# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் பிரியமான கிறிஸ்தவ வரலாற்று பிரியர்களுக்கு,

ஆண்டவரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் அன்பின் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

பராபரனுடைய பெரிதான கிருபையினாலே இம்மாதம் நமது இதழின் நான்காம் ஆண்டினை துவங்கியுள்ளோம். **'அற்பமான ஆரம்பத்தின் நாளை யார் அசட்டைபண்ணலாம்?'** என்ற சகரியா தீர்க்கனின் வார்தையின்படி எளிதான ஆரம்பம்தான் **திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரிய வேண்டும்** என்ற நோக்கத்தின் அடிப்படையில் பயணித்து வருகின்றோம்.

நமது வரலாற்றுச் சங்கம் பழைய புத்தகங்களை டிஜிட்டல் வடிவத்திற்கு மாற்றும் பணிகளை பல்வேறு நூலகங்களில் செய்து வருகின்றோம். பல புத்தகங்களை மறுப்பதிப்பு செய்தும் வருகின்றோம். புதிய எழுத்தாளர்களை உருவாக்கி அவர்களை கொண்டும் நூல்களை வெளியிட்டு வருகின்றோம். இன்னும் சபை வரலாறுகளை எழுதுவதற்கு இளம் எழுத்தளர்களை உருவாக்குவது நமது கடமை. திருச்சபை வரலாற்றுப் நூல்களையும், மிஷனெரி நூல்களையும் அனைத்து திருச்சபைகளுக்கும் கொண்டு செல்ல வாகன தேவைக்காகவும், விரைவில் நூலகம் அமைக்கும் பணிகளை தொடங்க இருக்கிறோம். இரண்டு தேவைகளும் சந்திக்கப்பட ஜெபித்துக்கொள்ளுங்கள்.

திருநெல்வேலி வரலாற்றுச் சங்கத்திற்கு தாங்கள் அளித்துவரும் ஆதரவையும், உதவியினையும் தொடர்ந்து கொடுக்க அன்புடன் கேட்டுக்கொள்ளுகின்றோம். ஒவ்வொரு மாதமும் மாத இதழினை அச்சிடுவதற்கு பெரும் பொருட்செலவீனங்கள் உண்டு. விளம்பரங்கள் மூலமாகவும், நன்கொடைகள் மூலமாகவும் ஆதரவு கொடுக்க அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன். தங்களுக்கு தெரிந்த நண்பர்களுக்கு மாத இதழினை அறிமுகம் செய்து அவர்களை சந்தாதாரர்கள் ஆக்குவதின் மூலம் இன்னும் பலருக்கு திருச்சபை வரலாற்று செய்தி சென்றடையும். சந்தா, நன்கொடைகளை அனுப்ப இதழின் பக்கங்களிலிருக்கும் வங்கிக் கணக்குகளை பயன்படுத்திக்கொள்ளுங்கள். இச்சங்கத்தின் ஊழியத்திற்காக தொடர்ந்து ஜெபிக்க உங்களை அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

பாரபரனின் பணியில்

*Manna Selvakumar*



**சுஜித் ரெக்ஸ்**

**வடிவமைப்பு**



**மன்னா செல்வகுமார்**

**ஆசிரியர்**

G Pay

**தொடர்புகொள்ள +91 91767 80001**

கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

**மாத ஆய்விதழ் சந்தா விபரம்**

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**வங்கி விபரம்**

Name: Tinnevelly Christian Historical Society

A/c Number : 1748 020000 3684

Bank name : Federal Bank

IFSC code: FDRL0001748

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்"
மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள
G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற
எண்ணுக்கு செலுத்தவும்
காசோலை மற்றும் வரைவோலை செலுத்த
'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்'
( Tinnevelly Christian Historical Society )
என்ற பெயரில் எடுக்கவும்


**ஆசிரியர்**

**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401, 91767 80001

christianhistoricalsociety.in
tchsportal.co.in

christianhistorical@gmail.com





# வாழ்த்துக்கள் ...



நான்கு ஆண்டுகளாக தமிழ் கிறிஸ்தவ வரலாற்றுக்கும் குறிப்பாக திருநெல்வேலி கிறிஸ்தவம் என்ற தொன்னாட்டு கிறிஸ்தவத்திற்கும் அதன் கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் தேய்ந்து அழியும் முன்னதாக அவைகளை தேடித்தேடி பதிவிட்டு பாதுகாத்திடும் தங்கள் ஒப்பற்ற பணிக்கு ஒப்பேதுமில்லை என்பேன்! இந்த பணியில் ஈடுபட்டு ஓய்வறியாது உழைத்திடும் 'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்' தந்த சங்க நிர்வாகிகளுக்கு தோழமையுடன் வாழ்த்துக்கள்.

**பர்னபாஸ்,**
சேலம் வரலாற்றுச் சங்கம்



# மிஷனரிகளும் திராவிட விழிப்பும்

**Rev. I. Livingston Rajan Durai,** NGO 'B' Colony.

ஆங்கிலேய அரசு வழங்கிய உயர் கல்வியும், அரசு பணிகளும் மாநிலத்தின் மிக சிறிய பிரிவினரான ஓர் இனத்தவர்க்கு மட்டுமே வழங்கி வந்தமைக்கெதிராக முதன்முதலில் எதிர்குரல் எழுப்பியவர். மிஷனரி. பிஷப் கால்ட்வெல் ஐயா அவர்கள் தான். கிழக்கிந்திய கம்பெனியாரும் சுயநலத்துக்காக பிற உழைக்கும் சாதியினை வெறுத்து ஒதுக்கியதை கண்டித்து தனது நூலில் எழுதியுள்ளார். (Caldwell.R.The Tinnelvelly Shanar.P73) பிரிட்டிஷ் அரசின் பார்ப்பன ஆதரவு கல்வி மற்றும் வேலைவாய்ப்பு கொள்கை பற்றிய முதல் கண்டன குரலை வெளியிட்டார்.

மேலும் 19 ஆம் நூற்றாண்டு வரை பல்வேறு ஆரிய அமைப்புகளும் ஆரிய மோலாண்மையே இந்திய தேசீயம் என பறை சாட்டிக் கொண்டிருந்த காலத்திலே தமிழர்கள் ஆரியரின்று வேறுபட்ட ஒரு தனி தேசீய இனத்தவர் என்றும். தமிழ் மொழியும், பண்பாடும், அற கருத்துகளின்று உயர்வானவை என்றும் எடுத்துரைத்து தமிழர்களின் மேன்மையை உலகிற்கு அறிமுகப்படுத்தியவரும் ஃபிஷப் கால்ட்வெல் அய்யா அவர்களே.

ஆரிய இனம் தமிழ் இன வரலாற்றை மாற்ற எடுத்த முயற்சிகளை கடந்த 3000 ஆண்டுகளாக அது எதிர்த்தும் தடுத்தும் தன் தனியிலைபை வெளிகாட்டியே வந்துள்ளது என திராவிட ஒப்பிலக்கண நூலில் எழுதியுள்ளார்.

மிஷனரி G.U.போப் தமிழர்களின் வழிபாடுகளை நுட்பமாக ஆராய்ந்து இவர்கள் வழிபாடும் வேறுபட்டதே என நிறுவினார். மிஷனரிகள் போர்குரல்களை பரவ செய்ய பரிதிமால் கலைஞர், மறைமலையடிகள் (M.C.C பேராசிரியர்கள் இவர்கள்) முயற்சி மேற்கொண்டனர்.

அப்போது நம் சகோதர வெள்ளைய மிஷனரிகள் இவ்வுண்மைகளை தெளிவுபடுத்தாமல் போயிருந்தால் தமிழர்கள் தன் இன அடையாளத்தை இழந்திருப்பார்கள். ஆரிய மாயையில் கலந்தும் கரைந்தும் போயிருப்பார்கள். அன்றும், இன்றும் ஆரிய இன வெறியர்கள் மற்றும் அதன் அடிமைகள் மிஷனரிகளை தீயாய் சுடுவதற்கு காரணங்களில் இதுவும் ஒன்று ஆகும்.

இங்கணம் தமிழர்கள் தங்கள் தனிதன்மையை உணர வைத்ததுடன் நில்லாமல் இயேசுவின் நற்செய்தியை அறிவித்து பார்ப்பானீய அடிமைத்தளையிலிருந்து மீட்க பாடுபட்டனர். இழிவை அகற்றி மனித உரிமைகளை நிலைநாட்டி கல்வி சுகாதாரம் வேலை வாய்ப்புகளில் நேசக்கரம் நீட்டியவர்கள் மிஷனரிகளே.

மிஷனரிகள் இல்லையென்றால் சமூகத்தின் இப்பாமர மக்கள் என்றென்றும் தலைதூக்கியிருக்கமாட்டார்கள். இச்செயல் மூவாயிரம் ஆண்டுகளில் பாரதம் அறிந்திராத ஒன்றாகும் நம்மை தொட்டு அரவணைத்த வெள்ளையனே நம் சகோதரன் நம்மை தொடாத, தொடவிடாத; தீட்டு தீட்டு என கூப்பாடு போடுகிறவன் எனக்கு அந்நியனே நமக்கு அந்நியனே ஆகும்.

இன்று திராவிடம் அதை செய்தது இதை செய்தது என கூவித்திரிகின்ற பலருக்கு திராவிடம் எனும் சொல்லையே வெளிக்கொணர்ந்தது, மிஷனரி பிஷப் கால்டுவெல் அய்யா என்று நினைவு இருக்குமானால் நல்லது. ஏனெனில் இல்லாத ஒன்றை உருவாக்குவது எந்த ஆதரவுமில்லாமல் செய்வது மிக கடினம் அதை செய்து தமிழர் விழிப்பை உருவாக்கியது நம் மிஷனரிகளே, அரசு உதவியுடன் எதையும் செய்வது எளிது அதற்கான அடித்தளமும் வழியும் விழிப்பும் உருவாக்கியவர்களும் நம் மிஷனரிகளே.

# நாட்டுச் சபை (ஏ) இந்திய ஏக இரட்சகர் திருச்சபை வரலாறு



ஜே ஜான் ஞானராஜ்





**1857 ஆம் ஆண்டு எஸ். பி. ஜி மிஷனில் பிளவு**

எஸ். பி. ஜி மிஷன் சபைகளில் 1857 இல் பிளவு ஏற்பட்டது. எஸ். பி. ஜி மிஷனின் தலைசிறந்த உபதேசிமார்களாக இருந்த இருவரின் குடும்ப காரியங்களை முன்னிறுத்தி எஸ். பி. ஜி மிஷன் உபதேசியார் பொறுப்பில் இருந்து அவர்களிருவரையும் நாசரேத் வட்டார எஸ். பி. ஜி தலைமை மிஷனரி கேமரர் ஐயரவர்கள் தவறான முறையில் பணி நீக்கம் செய்ததே அந்த பிளவுக்கான முக்கிய காரணம். அவ்விருவர் குறித்தும், பிளவு ஏற்பட்ட விதம் குறித்தும் நாட்டு சபை உருவான விதம் குறித்தும் காண்போம்.

**சட்டாம்பிள்ளை அருமைநாயகம் (1823-1919)**

அக்காலத்தின் சுதேச கிறிஸ்தவர்களுக்குள் உயர்ந்த கல்வியை சட்டாம் பிள்ளை அருமைநாயகம்

பெற்றிருந்தார். அதன் காரணமாக நாசரேத்தில் பள்ளி ஆசிரியராக அவர் பணியமர்த்தப்பட்டார். அங்கு பணி செய்த வேளையில் 1848 இல் சபை ஊழியர் அல்லாத ஆசிரியர்களுக்கான Monkton Catechistship வேதாகமத் தேர்வில் முதன்மையாக தேர்ச்சி பெற்றதன் காரணமாக சபைஊழியராக பணிசெய்வதற்கான உபதேசியார் பட்டத்தை அவர் பெற்றிருந்தார். 1849 இல் உபதேசியார்களுக்கான தேர்வில் முதல் மதிப்பெண் பெற்று அவர் தேர்ச்சி பெற்றதால் எஸ். பி. ஜி திருச்சபை மாமன்றம் இறையியல் கல்வி கற்க சாயர்புரம் போப் செமினரிக்கு அவரை அனுப்பி வைத்தது. அங்கு இறையியல் கல்வி கற்று வந்தபோது அந்த செமினரியில் மாணவர் தலைவராக அருமைநாயகம் இருந்தமையால் சட்டாம் பிள்ளை என்று அழைக்கப்பட்டார். அவர் வெள்ளக்கோயில் கொற்கை பாண்டியர் வழி மரபில் பாளையத்தார் குடும்பத்தில் வேதநாயக நாடார் - தங்கம்மாள் தம்பதியரின் மகனாக நாசரேத்தில் 24.10.1823 யில் பிறந்தவர்.

இயேசுவடியான் நாயகம், ஜான் நாயகம் என இரு தம்பிமார்களும், பாக்கியத்தம்மாள், சுவாமியடியாள் உட்பட ஏழு சகோதரிகளும் சட்டாம் பிள்ளை அருமைநாயகத்திற்கு இருந்தனர். பல மொழிகளைக் கற்றுத் தேர்ந்த பன்மொழி பண்டிதராக வரலாற்று அறிஞராக இருந்தார். ஆயிரக்கணக்கான நூல்கள், ஓலைச்சுவடிகள் கொண்ட வீட்டு நூலகம் இவரிடம் இருந்தது. 16.01.1919 இல் இவர் மரணமடைந்தார்.

**சுவாமியடியான் உபதேசியார் (1798 - 1879)**

நாசரேத்தில் பிரதான முக்கந்தராகவும் நாசரேத்தின் பூர்வ குடும்பத்தைச் சார்ந்தவரும், அக்கிராமத்தின் தொடக்க கால கிறிஸ்தவரும், நாசரேத் தேவாலய முதல் கோயில் குட்டியாருமான கருப்பன் முக்கந்தர் எனும் பெரியவரின் மகனாக சுவாமியடியான் உபதேசியார் 1798 இல் பிறந்தார். இவருடன் பிறந்தவர் ஐவர், அதில் இவரும் இவரது தங்கை அன்னம்மை அம்மாளும் மட்டுமே நிலைத்தனர். சுவாமியடியானின் தாயார் மற்றும் சுவாமியடியானின் மூத்த மகன் ஏசுவடியானின் மனைவி லெட்சுமி என்ற பாக்கியம் ஆகியோர் மூக்குப்பீறியைச் சேர்ந்தவர்கள்.

இவர் நாசரேத்திலும், மூக்குப்பீறியிலும் ஆகிய இரு இடங்களிலும் ஒரே நேரத்தில் பல ஆண்டுகள் சபை ஊழியராக இருந்தார். அதன் பின்னர் மூக்குப்பீறி கிராமத்தில் மட்டும் இவர் சபை ஊழியராகப் பணி செய்து வந்தார். அக்காலத்தில் மூக்குப்பீறி சின்ன மாவீடுபண்ணை என்று அழைக்கப்பட்டது. ஏனென்றால் மாவீடு பண்ணை நிலச்சுவான்தார்களின் ஆளுகையின் கீழ் மூக்குப்பீறி இருந்தது. மாவீடுபண்ணை நிலச்சுவான்தார்களின் ஆதிக்கத்திலிருந்து மூக்குப்பீறி கிராமத்தாரின் நில புலன்களுக்கு சுயாதீனத்தை தனது உதாரமான, தைரியமான, திறமையான நடவடிக்கைகளால் சுவாமியடியான் உபதேசியார் பெற்றுக் கொடுத்தார். நிலங்களில் சுயாதீனம் கிடைத்த பிறகே மூக்குப்பீறி கிராமத்தார் பொருளாதாரத்தில் உயர்ந்த நிலைக்கு சென்றார்கள். ஆதலால் இவருக்கு மூக்குப்பீறியில் நல்ல செல்வாக்கு இருந்தது. 1838 இல் இவர் மூக்குப்பீறியில் சபை ஊழியராகப் பொறுப்பேற்ற போது 2000 மக்கள் தொகை கொண்ட பெரிய கிராமமாக மூக்குப்பீறி இருந்தது. அந்நேரம் கிராமத்தில் பெரும்பாலானோர் இந்துக்களாகவே இருந்தனர். இவரது ஊழியத்தால் இக்கிராமத்தில் பெரும்பாலானோர் கிறிஸ்தவர் ஆயினர்.

சுவாமியடியான் உபதேசியாருக்கு ஏசுவடியான், ஆபிரகாம், செல்வம் (பெண்), மோசஸ், வேதமாணிக்கம், ஜான், சாலமோன், ஜோசப், என 7 ஆண், 1 பெண் ஆக எட்டு பிள்ளைகள், பிள்ளைகளை தெய்வ பக்தியில் அதிக கண்டிப்பாக வளர்த்தவர் மற்றும் வேதவாசிப்பு ஜெபத்தியானங்களில் வெகு கரிசனை உடையவர் என்றும் பக்தி மிக்கவர், காரிய சமர்த்தர் என எஸ். பி. ஜி மிஷனரிமார்களால் புகழப்பட்டவர் சுவாமியடியான் உபதேசியார், இவரது வீட்டில் மேல் அறை, கீழ் அறை என இரு பெரிய அறைகள் இருந்தன அவற்றில் சபை மக்களுக்கு இவரால் வேத பாடம் நடத்தப்பட்டு வந்தது.

இவர் சட்டாம் பிள்ளை அருமை நாயகத்தின் மூத்த அக்கா பாக்கியத்தமாளைத் திருமணம் செய்திருந்தார், இவர் நாசரேத்தின் முதல் பள்ளிக்கூடமான கஸ்பா பள்ளிக்கூடத்தில் முதல் தலைமை ஆசிரியரான தவசியப்பனுக்குப் பின்பு இரண்டாம் தலைமை ஆசிரியராகப் பொறுப்பேற்று பணி செய்து வந்தார். 1828 இல் இவர் கஸ்பா பள்ளிக்கூட தலைமை ஆசிரியராகப் பணி செய்தது குறித்த குறிப்புகளை பேராயர்.கால்டுவெல் குறிப்பிட்டுள்ளார். அந்த காலத்தில் சட்டாம்பிள்ளை அருமைநாயகம் இவரிடத்தில் தொடக்கப்பள்ளி கல்வியைக் கற்றார். இவர் 17.11.1879 இல் மரணமடைந்தார்.

சட்டாம் பிள்ளை அருமை நாயகமும், அவரது மூத்த அக்காவை திருமணம் செய்திருந்த அத்தான் சுவாமியடியான் உபதேசியாருமே நாட்டுச் சபை எனும் இந்திய ஏக இரட்சகர் திருச்சபையின் உருவாக்கத்தில் முக்கிய பங்கு வகித்தவர்கள்.

**சட்டாம் பிள்ளை அருமை நாயகம் சபை நீக்கம் செய்யப்படுதல்**

1849 இல் சட்டாம் பிள்ளை அருமை நாயகம் நாசரேத் பள்ளிக்கூடத்தில் நடைபெற்ற ஒரு தற்கொலை சம்பவம் குறித்து சாயர்புரத்தில் இருந்து நீதி கேட்டு கேமரர் ஐயரவர்களுக்கு கடிதம் எழுதி இருந்தார். அதன் காரணமாக அவர் மீதும் அவரது அத்தான் சுவாமியடியான் மீதும் கேமரர் ஐயர் அவர்களுக்கு கோபம் இருந்தது. 1850 இல் சட்டாம் பிள்ளை அருமை நாயகம் தமது தாய் மாமாவான பிரகாசபுரம் மதுரநாயகம் முக்கந்தரின் மகள் செல்வத்தை திருமணம் செய்ய நிச்சயதார்த்தம் செய்தார். செல்வம் மிஷன் பள்ளிக்கூடத்தில் கல்வி கற்காதவர் என்பதால் அந்த திருமண நிச்சயதார்த்தத்தை கேமரர் ஐயரவர்கள் ஏற்க மறுத்தார்.

மேலும் தம் வீட்டில் பணி செய்து வந்த மிஷன் பள்ளியில் கல்வி கற்றிருந்த பிற சமூகப் பெண்ணை சட்டாம்பிள்ளை அருமைநாயகம் திருமணம் செய்யும்படி கேமரர் ஐயரவர்கள் கேட்டுக்கொண்டபோது அதை ஏற்றுக்கொள்ள சட்டாம்பிள்ளை அருமைநாயகம் மறுத்து விட்டார். இந்நிலையில் கேமரர் ஐயரவர்கள் அருமைநாயகத்தை 1850 இல் பணி நீக்கம் செய்தார்.

**சுவாமியடியான் உபதேசியார் ஐயரால் பணிநீக்கம் செய்யப்படுதல்**

அருமை நாயகத்தின் மீது காட்டிய வெறுப்பைப் போன்று சில ஆண்டுகளில் அவரது மூத்த அத்தான் சுவாமியடியான் உபதேசியார் மீதும் கேமரர் ஐயரவர்கள் வெறுப்பு காட்டத் தொடங்கினார். சுவாமியடியான் உபதேசியாரின் மூத்த மகன் 1855 இல் நாட்டு மருந்து செய்வதற்காக உருகிய காரீயத்தை பன்றியின் காதில் ஊற்றினார் என்றும், பில்லி சூனிய வழக்கு

ஒன்றில் அவர் தொடர்பாய் இருந்தார் என்றும் கூறி அதற்காக அவரது தகப்பனாரும் எஸ். பி. ஜி மிஷனின் புகழ் வாய்ந்த உபதேசியார் என்று மிஷனரிமார்களால் புகழப்பட்டவருமான சுவாமியடியான் உபதேசியாரை 1857 இல் மிஷன் உபதேசியார் பணியில் இருந்து பணி நீக்கம் செய்தார். தொடர்ந்து புதிய உபதேசியாரை மூக்குப்பீறிக்கு நியமனம் செய்தார். இவர் பணி நீக்கம் செய்யப்பட்டதைக் கண்டித்து மூக்குப்பீறி சபையார் மூக்குப்பீறி தேவாலயத்திற்குச் செல்ல மறுத்தனர். பக்கத்து ஊரான பிரகாசபுரம் சி எம் எஸ் தேவாலயத்திற்கு 19.07.1857 முதல் சென்றனர். அதற்கு சி எம் எஸ் மிஷனரிமார் தடை விதிக்கவே தேவாலயம் செல்வதையே நிறுத்தினர். 1857 இல் பிரகாசபுரம் மதுரநாயகம் முக்கந்தர், ஒய்யான்குடி சபை ஊழியர் விசுவாசம் உபதேசியார் ஆகியோர் சபை நீக்கம் செய்யப்பட்டனர். பாதிக்கப்பட்ட சட்டாம்பிள்ளை அருமை நாயகம், சுவாமியடியான் உபதேசியார், பிரகாசபுரம மதுரநாயகம் முக்கந்தர், விசுவாசம் உபதேசியார் என அனைவரும் இணைந்து கேமரர் ஐயருக்கு எதிராக செயல்பட ஆரம்பித்தனர்.

அந்நேரம் எஸ்.பி.ஜி மிஷனின் M.D.C கமிற்றியில் நீதி கேட்க சென்னைக்கு சென்று சில ஆண்டுகள் தங்கி இருந்து நீதி மறுக்கப்பட்ட நிலையில் நாசரேத் திரும்பி வந்த சட்டாம்பிள்ளை அருமைநாயகம் 03.01.1857 இல் நாசரேத் தேவாலயம் சென்றார். அங்கு சென்ற போது கேமரர் ஐயர் செட்டி என்பவரைக் கொண்டு அவரை தேவாலயத்தை விட்டு வெளியேற்றினார். இதனால் நால்வரும் வெகுண்டெழுந்தனர்.

"திருநெல்வேலி சாணார்" எனும் கனம். கால்டுவெல் ஐயரவர்களின் நூல் சந்தையில் வாசிக்கப்படுதல் 1849 இல் இங்கிலாந்தில் வெளியிடப்பட்டு சென்னையில் காணப்பட்ட "திருநெல்வேலி சாணார்" எனும் கால்டுவெல் ஐயரவர்களின் நூல் சட்டாம் பிள்ளை அருமை நாயகத்திற்கு சென்னையில் வைத்து கிடைத்தது. அந்த நூலில் நாடார் சமூக குணாதிசயங்கள், நாடார் சமூக பூர்வீகம் குறித்து கால்டுவெல் அவர்கள் தமக்கு சென்னை மாகாணத்திலும் திருவாங்கூர் சமஸ்தானத்திலும் சொல்லப்பட்ட செய்திகளை அடிப்படையாகக் கொண்டு குறிப்பிட்டிருந்த சில வார்த்தைகள் நாடார் சமூகத்தாரை வருத்தப்படுத்துவதாக இருந்தது. அந்த வாசகங்களையும் முதலூர் கோர்ண்ஸ் ஐயரவர்கள் நாடார் சமூகம் குறித்து கூறிய வாசகங்களையும் 1857 இல் நாசரேத்தை அடுத்துள்ள மூக்குப்பீறி-பிரகாசபுரத்தில் சந்தை நடைபெறும் நாள் அன்று பெருந்திரளான மக்கள் கூடியிருந்த போது வாசித்துக் காட்டினர். கேமரர் எனும் மிஷனரி செய்த தவறையும், நமது சமூகம் குறித்து வருத்தப்படுத்துகிற வார்த்தைகளை மிஷனரிகள் உபயோகிக்கின்றனர் என்ற பரவலான எண்ணத்தை சந்தைக்கு வந்த நாடார்கள் மத்தியில் அனைவரும் ஏற்படுத்தினர். புதிய நூல் வெளியிடுவதற்கு என நாலணா பணமும் வசூலித்தனர். இதை அறிந்த கேமரர் திருநெல்வேலி மாவட்ட துணை ஆட்சியாளருக்கு தகவல் தெரிவித்தார். அதன்பேரில் சம்பவ இடத்துக்கு வந்த அவர்கள் சட்டாம்பிள்ளை அருமை நாயகம், சுவாமியடியான் உபதேசியார், விசுவாசம் உபதேசியார் ஆகியோருக்கு 45 ரூபாய் அபராதம் விதித்தனர். இச்சம்பவம் நாசரேத் வட்டாரத்தில் கொந்தளிப்பை ஏற்படுத்தியது.

**இந்து (இந்திய) ஏக இரட்சகர் திருச்சபை எனும் நாட்டுச் சபை தொடக்கம்**

தொடக்கத்தில் இந்து ஏக இரட்சகர் திருச்சபை எனப்பட்ட இந்த சபை பின்னர் இந்திய ஏக இரட்சகர் திருச்சபையாக அழைக்கப்பட்டது. இந்த பெயரிலேயே 02.08.1956 இல் அரசாங்கத்தில் இந்த சபை பதிவு செய்யப்பட்டது.

நாசரேத் வட்டார எஸ்.பி.ஜி சபை மக்கள் பெருந்திரளாக ஒன்று கூடி சட்டாம் பிள்ளை அருமைநாயகத்தை பல்லக்கில் ஏற்றி பிரகாசபுரம் வழியாக மூக்குப்பீறி சந்தைக்கு வந்தனர். மூக்குப்பீறி சந்தையில் துணிக்கடை அருகில் இருந்த ஆலமரத்தடியில் சட்டாம்பிள்ளை அருமைநாயகத்தைக் கொண்டு இந்த சபையின் முதல் ஆலய வழிபாடு 30. 08. 1857 அன்று நடைபெற்றது. ஐந்து வாரங்கள் ஞாயிறுதோறும் அந்த இடத்திலேயே ஞாயிறு ஓய்வு நாள் ஆராதனை நடைபெற்றது. அதன் பின் 04.10.1857 முதல் பிரகாசபுரத்தில் புதிய இடத்தில் ஓலை வேயப்பட்ட மேற்கூறையை கொண்ட தற்காலிக தேவாலயம் ஒன்றை அமைத்து இந்த சபையின் தேவாலய வழிபாடு நடைபெற்றது. 25. 12. 1857 அன்று பிரகாசபுரத்தில் நடைபெற்ற இந்த புதிய சபையின் பொதுக்கூட்டத்தில் புதிய சபைக்கான புதிய கோட்பாடுகள் வகுக்கப்பட்டது. அந்நேரம் தொடக்கத்தில் இந்து ஏக இரட்சகர் திருச்சபை என்ற பெயர் இதற்கு சூட்டப்பட்டது.

மூக்குப்பீறியில் 16 குடும்பத்தைச் சேர்ந்த 45 சபை மக்கள் மட்டுமே கேமரர் பக்கம் எஸ். பி. ஜி சபையில் இருந்தனர். மீதமுள்ள அனைவரும் சுவாமியடியான் உபதேசியார் பக்கம் நின்றனர். இரு தரப்பாருக்கும் இடையே மோதல் ஏற்பட்டது. காவல்துறை வரை மனுக்கள் சென்றது. சுவாமியடியான் உபதேசியார் பிரகாசபுரம் மதுரநாயகம் முக்கந்தர் மற்றும் சிலர் இதனால் சில நாட்கள் சிறையில் இருக்கும் சூழ்நிலையும் ஏற்பட்டது.

அந்த வட்டாரத்தில் அநேக திருச்சபைகளில் இருந்து சபை மக்கள் எஸ்.பி.ஜி மிஷன் சபையிலிருந்து வெளியேறி சட்டாம்பிள்ளை அருமை நாயகம் 1857 இல் தொடங்கி இருந்த இந்திய ஏக இரட்சகர் திருச்சபை எனும் நாட்டு சபையில் சேர்ந்தார்கள்.

இவ்வாறு கேமரர் ஐயரவர்கள் தவறாக நடந்து கொண்டது குறித்து நாடார்கள் தரப்பில் எஸ்.பி.ஜி மேலிடத்திற்கு புகார் தெரிவிக்கப்பட்டது. புகாரை ஏற்றுக் கொண்ட எஸ்.பி.ஜி மேலிடம் உடனடியாக கேமரர் மீது நடவடிக்கை எடுத்தது, கேமரரை தஞ்சாவூருக்கு உடனடியாகப் பணி மாற்றம் செய்தது. நாசரேத் எஸ்.பி.ஜி தலைமை மிஷனரி ஆக ஹென்றி போப் ஐயரவர்கள் உடனடியாக நியமிக்கப்பட்டார்கள்.

இந்த சம்பவம் அருகில் இருந்த சி.எம்.எஸ் சபைகளையும் பாதித்தது. அருகில் இருந்த சி.எம்.எஸ் சபையான பிரகாசபுரம் மற்றும் இரட்சணியபுரம் சபையையும் பாதித்தது. இரட்சண்யபுரம் சபையார் அனைவரும் CMS சபையில் இருந்து ஒட்டுமொத்தமாக விலகி நாட்டு சபை என்றழைக்கப்பட்ட இந்திய ஏக இரட்சகர் திருச்சபையில் சேர்ந்தனர்.

மகாகனம் பேராயர். கால்டுவெல் அவர்கள் 'திருநெல்வேலி சாணார்' எனும் தமது நூலுக்காக வருத்தம்

தெரிவித்து அந்நூலை முழுமையாக வாபஸ் பெற்றுக் கொள்ளுதல் தாம் நேசித்த நாடார் சமூக மக்கள் மத்தியில் அவர்கள் வாழும் கிராமங்களில் பள்ளிகள் தொடங்க, பள்ளிக் கட்டடம் கட்ட, ஆசிரியர்களை நியமித்து அவர்களுக்கு மாதந்தோறும் சம்பளம் வழங்க என கல்விப் பணிக்காக இங்கிலாந்தில் இருந்த தமது நண்பர்களிடம் நன்கொடை திரட்டும் பொருட்டு தம்மால் எழுதப்பட்டு 1849 இல் வெளியிடப்பட்ட 'திருநெல்வேலி சாணார்' எனும் நூல் மூலம் தாம் நேசித்த நாடார்கள் தம் மீது வருத்தம் கொண்டிருப்பதை அறிந்த கனம்.கால்டுவெல் பேராயராகப் பதவி வகித்த போது 1881 இல் இந்நூலை முழுமையாக வாபஸ் பெற்றுக் கொண்டார். மேலும் வாபஸ் பெற்றதோடு தொடக்க காலத்தில் தமக்கு சொல்லப்பட்ட செய்திகளை முன்வைத்து அந்த நூல் தம்மால் எழுதப்பட்டது என்றும் தாம் எழுதிய அந்நூலில் உள்ள கருத்துக்கள் அவர்களது மனதை வருத்தப்படுத்தியதற்காக தனது வருத்தத்தையும் அந்நூலை வாபஸ் பெற்றுக் கொண்ட போது தெரிவித்து அதையும் பதிவும் செய்திருந்தார். மேலும் அந்நூலை வாசித்த தமது இங்கிலாந்து நண்பர்கள் நாடார் கிராமங்களில் நடைபெற்ற கல்விப்பணிக்காக சிறந்த முறையில் பொருளாதார உதவி செய்ததால் கல்விப்பணியைச் சிறப்பாக செய்ய முடிந்தது. அதனால் அவர்கள் சிறப்பாக உயர்ந்துள்ளனர். ஆதலால் தமது நோக்கம் நிறைவேறி விட்டதாகவும் அந்நூலை 1881 இல் வாபஸ் பெறுகையில் குறிப்பிட்டிருந்தார்..

**நாட்டு சபையில் CMS சபையார் சேரக் காரணமாக இருந்த சம்பவம்**

மூக்குப்பீறிக்கருகில் அநேக CMS சபைகளும் இருந்தது. தொடக்கத்தில் மூக்குப்பீறி மற்றும் அதன் சுற்றுவட்டாரத்தில் இருந்த எஸ். பி. ஜி சபைகள் கேமரர் ஆளுகையின் கீழ் எஸ். பி. ஜி இல் இருக்க விரும்பாமல் CMS மிஷன் குறித்து நல்லெண்ணம் கொண்டிருந்தபடியால் அதன் தலைமை மிஷனரி ஜான் தாமஸ் ஐயரவர்களை சந்தித்து தங்களை CMS சபைகளாக சேர்த்துக் கொள்ள வேண்டினார்கள். ஆனால் இது சபை ஒழுங்கை குலைக்கும் செயல் என எண்ணி அவர் அதற்கு மறுத்துவிட்டார். ஜான் தாமஸ் ஐயரவர்கள் மறுப்பு தெரிவித்தது சுற்றி இருந்த CMS சபைகளின் கிறிஸ்தவர்களுக்கு ஜான் தாமஸ் மீது கோபத்தை ஏற்படுத்தியது. அதன் காரணமாக பல CMS சபைகள் அந்த CMS மிஷனில் இருந்து வெளியேறி நாட்டுச் சபையில் சேர்ந்தார்கள். இவ்வாறு சேர்ந்த CMS சபைகளில் இரட்சணியபுரம் திருச்சபையும் ஒன்றாக இருந்தது.

**சுவாமியடியான் உபதேசியாரின் மனமாற்றம் - நாட்டுசபையில் இருந்து எஸ். பி. ஜி சபைக்கு மீண்டும் திரும்பி வருதல்**

நாட்டு சபை உருவாக்கத்தில் சட்டாம் பிள்ளை அருமை நாயகத்திற்கு வலதுகரமாக இருந்த அவரது மூத்த அத்தான் சுவாமியடியான் உபதேசியார் சிறந்த வேத பண்டிதர். 1858 இல் அவரையோ மற்றும் பிறரையோ கலந்து ஆலோசிக்காமல் நாட்டு சபையின் ஓய்வு நாள் வழிபாட்டை சட்டாம் பிள்ளை அருமை நாயகம் ஞாயிற்றுக்கிழமையிலிருந்து சனிக்கிழமைக்கு மாற்றினார். இக்காரியத்தில் அவரது மூத்த அத்தான் சுவாமியடியான் உபதேசியார் சட்டாம்பிள்ளை அருமை நாயகம் மீது பெரும் அதிருப்தி கொண்டிருந்தார். அந்நேரம் குருப்பட்டத்திற்கு படிக்க செல்வதற்கு ஆயத்தமாகி இருந்த சுவாமியடியான் உபதேசியாரின் மகள் செல்வத்தைத் திருமணம் செய்திருந்த அவரது மருமகன் யோபு உபதேசியார் தம் மாமனாரிடம் இது குறித்து பேசி மீண்டும் எஸ்.பி.ஜி மிஷன் சபையில் சேரும்படி தொடர்ந்து வற்புறுத்தி வந்தார். அவ்வாறு சேரும் பட்சத்தில் ஒரு ஆண்டு மட்டும் வெளியிட சபையில் அவர் உபதேசியாராக இருந்து பின்னர் மூக்குப்பீறி சபைக்கே அவரை மீண்டும் உபதேசியாராக நியமிப்பதற்கு மிஷன் தயாராக இருப்பது குறித்து தெரிவித்தார்.

இதை ஏற்றுக் கொண்ட அவர் 1858-1859 இல் மீண்டும் எஸ். பி. ஜி மிஷன் சபையில் சேர்ந்தார். அவருக்கு ஒரு ஆண்டு செபத்தையாபுரத்தில் உபதேசியாராகப் பணி செய்யும் வாய்ப்பு கொடுக்கப்பட்டது. அதன் பின்னர் 1860 இல் மூக்குப்பீறியிலேயே அவர் உபதேசியாராக மரணமடையும் வரை பணி செய்ய வாய்ப்பு கொடுக்கப்பட்டது. அவரது அந்த ஊழியப் பணிக்காலத்தில் மூக்குப்பீறியில் பாதிக்கும் மேற்பட்டோர் எஸ். பி. ஜி மிஷன் சபையில் சேர்ந்தார்கள். சுவாமியடியான் உபதேசியாரின் கல்லறையும் அவரது மனைவி பாக்கியத்தம்மாளின் கல்லறையும் மூக்குப்பீறி பரி.மாற்கு மேல்நிலைப்பள்ளி வளாகத்தில் உள்ளது.

**நிறைவு**

கேமரர் ஐயரவர்களுக்குப் பின்னர் நாசரேத் தலைமை மிஷனரி ஆக பொறுப்பேற்ற போப் ஐயரவர்கள் அவருக்கு பின்பு பொறுப்பேற்ற தாமஸ் பிரதர்ட்டன் ஐயரவர்கள் மற்றும் நாலுமாவடி சி.எம்.எஸ் சேகர சபைகளையும் பிரகாசபுரம் சி.எம்.எஸ் சபையையும் கண்காணிப்பு செய்து வந்த மெஞ்ஞானபுரம் வட்டார மிஷனரி ஜான் தாமஸ் ஐயரவர்கள் ஆகியோர் நேரடியாக முயற்சிகளை மேற்கொண்டு நாட்டு சபை பிளவு எனப்படும் இந்த பிரிவினையை முற்றிலும் நீக்க முயற்சிகள் மேற்கொண்டார்கள். ஆனாலும் அந்த வட்டாரத்தில் இன்றளவும் அநேக கிராமங்களில் நாட்டு சபை எனும் இந்திய ஏக இரட்சகர் சபை செயல்பட்டு வருகிறது. தற்போது இந்த சபை சின்னாளப்பட்டி, கோயம்புத்தூர், சென்னை என வட தமிழ்நாட்டில் பல இடங்களில் காணப்படுகிறது. இந்த சபையில் சனிக்கிழமை அன்று தான் ஓய்வு நாள் வழிபாடு நடைபெறுகிறது. பழைய ஏற்பாட்டு ஆலய வழிபாட்டு முறைகள் நடைமுறைகள் இந்த சபையில் பின்பற்றப்படுகின்றன.





# கிறிஸ்துநாதர் ஆலயமும், சேலம் மாநகரின் மையப் புள்ளியும்

**ஜே பர்னபாஸ் சேலம்**

எப்படி புனித ஜெருசலேம் மாநகரம் உலகத்தின் மையத்தில் தேசங்களுக்கு நடுவில் இருக்கிறதோ, அவ்வாறே, சேலம் மாநகரின் நடுமையத்தில் நமது சேலம் CSI கிறிஸ்துநாதர் ஆலயம் இருக்கிறது. அந்த ஆலயத்தின் மையத்தில் சேலம் மாநகரின் மையப் புள்ளி (Centre point of Salem) அமைந்திருக்கிறது. ஆலயத்தின் கதவு எண் கூட அன்று பூஜ்ஜியம் 'O' என்று தான் பொறிக்கப்பட்டிருந்தது.

**1860-61 ஆம் ஆண்டுகளில் சேலம்:**

ஒருங்கிணைந்த சேலம் மாவட்டத்தின் தலைநகராக சேலம் மீண்டும் 1860ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டபோது, சேலத்தில் கிழக்கிந்திய கம்பெனி வர்த்தக நிர்வாக மையம் செயல்பட்டு வந்த கட்டிடம் சேலம் கலெக்டர் அலுவலகமாக (அன்றைய சேலம் பழைய கலெக்டர் அலுவலகம்) செயல்படத் துவங்கியது. கலெக்டர் அலுவலகம் அருகில் அன்றைய சேலம் ஜமீன்தாரினி திருமதி.ஜெசி தாமஸ் போக்ஸ் அம்மையாருக்குச் சொந்தமான வளாகமும், அதின் மையத்தில் ஆங்கிலேயர்கள் பில்லியார்ட்ஸ் விளையாடும் அரங்கமும் இருந்தது. அப்பொழுது கலெக்டர் அலுவலக வளாகமும், சேலம் ஜமீன்தாரினிக்குச் சொந்தமான வளாகமும் அடுத்தடுத்து ஒன்றாய் இருந்தது. இவைகளுக்கு நடுவே இன்று இருக்கும் CSI சர்ச் சாலை (CSI Church Road) அன்று இல்லை.

**சேலம் திரிகோண நிலஅளவைப் பணியும் சேலம் மாநகர் மையமும்:**

கி.பி.1860-61 ஆம் ஆண்டுகள் கால கட்டத்தில் அன்றைய சேலம் நகரில் திரிகோண நிலஅளவைப் பணி (Trigonometrical Survey) துவங்கப்பட்டது. அதைக் குறிக்க ஒரு இராஜ முட்டு (Royal Bench Mark) அன்றை சேலம் பழைய கலெக்டர் அலுவலகம் முன்பு நடப்பட்டது. அந்த இராஜமுட்டின் உச்சிப்பகுதி சேலம் நகரின் கடல் மட்டத்தைக் குறித்தது. (The height of the top of this pillar is 918.288 feet above the mean sea level of the sea) என்ற ஆங்கில வாசகம் இராஜமுட்டின் அடிப்பகுதியில் பொறிக்கப்பட்டது. தற்போது உள்ள ஸ்டேட் பேங்க் (அன்று Imperial Bank) வளாகத்தில் ஒரு சர்வே பாயிண்ட் அதை ஒரு Brass plate குறித்தது. அடுத்ததாக சேலம் பொது மருத்துவமனை வளாகத்தில்

ஒரு சர்வே கல் பதிக்கப்பட்டது. இப்படியாக இந்த மூன்று சர்வே புள்ளிகள் உருவாக்கிய ஒரு திரிகோணம்தான் அன்று சேலத்தில் துவங்கப்பட்ட சேலம் திரிகோண நில அளவையின் முதல் திரிகோணம். அந்த திரிகோண நில அளவை சமயத்தில் அந்த முதல் திரிகோண மையத்தில் - அந்த பூஜ்ஜிய பூமியின் (Zero ground) மையத்தில் அன்று சேலம் ஜமீன்தாரினி திருமதி.ஜெசி தாமஸ் போக்ஸ் அம்மையாரின் பில்லியார்ட்ஸ் அரங்கம் இருந்தது. அந்த விளையாட்டு அரங்கின் நுழைவு வாயில் படிகட்டில் சேலத்தின் பூஜ்ஜிய பூமியின் மையத்தைக் குறிக்க சிலுவை அடையாளம் இட்டு சேலம் திரிகோண நிலஅளவைப் பணி முடிக்கப்பட்ட ஆண்டான 1861 ஆண்டு பொறிக்கப்பட்டது.

இந்த கல்படிகட்டு அப்படியே மாற்றப்படாமல் கி.பி. 1875ல் இந்த இடத்தில் கட்டப்பட்ட சேலம் கிறிஸ்துநாதர் ஆலயத்தின் வாசல் படிகட்டாக இருக்கும்படி அந்த மையப்புள்ளி மாறாதபடி வைக்கப்பட்டது. இந்த திருகோண பூஜ்ஜிய பூமியின் மையத்தில் கட்டிமுடிக்கப்பட்ட சேலம் கிறிஸ்துநாதர் ஆலயத்தின் கதவு எண் கூட பூஜ்ஜியம் என்றே அன்று பொறிக்கப்பட்டிருந்தது. 1996 ஆம் ஆண்டு ஆலய முன்பக்க விரிவாக்கத்தின்போது பூஜ்ஜியம் என்று எண் பொறிக்கப்பட்ட கதவுகள், சேலம் மாநகரின் மையத்தைக் குறிக்கும் ஆலயத்தின் படிகற்கள் என யாவும் அகற்றப்பட்டு ஆலயம் முன்பக்கமாக விரிவாக்கம் செய்யப்பட்டு திறக்கப்பட்டது. இப்பொழுது சேலம் மாநகரின் மையம் சேலம் CSI கிறிஸ்துநாதர் ஆலயத்தின் மையப்பகுதிக்கு வந்துவிட்டது. மேற்படி சிலுவை அடையாளமிட்டு 1861 என்று வருடம் பொறித்த படிகல் விரிவாக்கம் செய்யப்பட்ட ஆலயத்தின் நடுவே கிழே அமைய, அதன் மேலே அன்று இருந்தது போலவே சிலுவைக் குறியீடும் 1861 என்ற வருடபொறிப்பும் Centre point of Salem என்ற வாசகமும் இன்று காணப்படுவதுபோல அன்று அமைக்கப்பட்டது. அதனால் இன்று அன்றைய திரிகோண அளவையின் முதல் முக்கோணத்தின் பூஜ்ஜிய பகுதியும், சேலம் மாநகரின் மையமும் நீங்கள் காணும்படி ஆலயத்தின் நடுப்பகுதியில் அமைந்துவிட்டது. இந்த பூஜ்ஜிய பூமியிலிருந்து நேராக அளந்து அங்கே இருந்த சேலம் பழைய ஆங்கிலேயர் கல்லறைத் தோட்டத்திற்கு சேலம் நகரின் முதல் சர்வே எண் (Town survey no.1) கொடுக்கப்பட்டது.

**தமிழ்நாடன் கருத்து :**

இது குறித்து சேலம் வரலாற்று எழுத்தாளர் திரு.தமிழ்நாடன் தனது "சேலம் மையப்புள்ளி" என்ற நூலில் "சேலம் மையம்" என்ற தலைப்பில் எழுதியுள்ளதை இங்கே நாம் அப்படியே எடுத்துக்கொள்ளலாம். அதில் அவர் சொல்லுவார் **"ஒரு மையப் புள்ளியிலிருந்து ஆயிரம் திசைகள் விரியலாம்; அதை நோக்கி பதினாயிரம் பாதைகள் பயணிக்கலாம். சேலம் மையப் புள்ளியை நோக்கி வந்த மக்கள் ஏராளம்."** எவ்வளவு உண்மையான வார்த்தைகள்.

அவரின் கருத்தின்படி சேலம் நகரின் மையம் என்பது சேலம் திருவள்ளுவர் சிலைக்கு நேர் எதிராக உள்ள திருமணிமுத்தாற்றின் குறுக்கே அமைந்த பெரிய பாலத்தின் தென் கிழக்கில் ஒரு மைல் கல் அதில் 'O' பூஜ்ஜியம் என்ற ஒரு பொறிப்பு உண்டு அந்த கல் நடப்பட்ட இடம்தான் சேலத்தின் மையம் Zero point என்று அவர் சொல்லுவார். ஆனால் அது இப்போது பாலம் விரிவாக்கத்திற்குப் பின்பு அந்த இடத்திலிருந்து பிடுங்கப்பட்டு திருவள்ளுவர் சிலைக்கு எதிரே அரசினர் பெண்கள் பள்ளியின் வாசல் அருகே சாலையோரத்தில் மீண்டும் நடப்பட்டிருக்கிறது. அதில் பூஜ்ஜியம் 'O' என்ற பொறிப்பும், "சேலம் டவுன்" என்ற வார்த்தைகளும் காணப்படுகிறது. கூடுதலாக 'SH-218' என்று அதில் எழுதப்பட்டும் இருக்கிறது. இந்த பூஜ்ஜிய மைல்கல் சேலம் டவுன் இங்குதான், இங்கிருந்து மற்றப்பகுதிகள் எவ்வளவு தூரத்தில் உள்ளது என்பதை அளக்கவும், சொல்லவும் துவக்கமான மைல்கல்லே இது என்பதைத் தவிர மற்றபடி இது சேலம் மாநகர மையப் புள்ளி அல்ல என்பதே எங்களது தெளிவு.

கி.பி.1875 ஆம் ஆண்டு (26-10-1875) சேலத்தின் மையத்தில் கட்டி முடிக்கப்பட்டு ஆறுதலின் மையமாக விளங்கும் இந்த சேலம் CSI கிறிஸ்துநாதர் ஆலயம் இன்று 149 ஆண்டுகளைத் தொட்டு நிற்கும் ஒரு வரலாற்றுச் சின்னம். அடுத்த வருடம் 2024ல் 150ஆம் ஆண்டை கொண்டாடும் வேளையில் இந்த ஆலயம் கிறிஸ்துவின் அன்பையும் ஆசீரையையும் ஆயிரம் திசைகளுக்கு அருளும் மையமாக திகழட்டும்.



# கேத்தரின் வான் போரா

## Katharina von Bora Luther





மொழிபெயர்ப்பு,

**முனைவர் த.ஜான்சிபால்ராஜ்**

சீர்திருத்தக் கிறிஸ்தவம் என்னும் மாபெரும் கிறிஸ்தவ சமயப் பிரிவுத் தோன்ற காரணமான மார்ட்டின் லூதர் என்ற பாதிரியாரின் பிறந்த நாளை 1983 ஆம் ஆண்டு நவம்பர் 10 ஆம் தேதி ஐநூறாவது ஆண்டு நிறைவை கிறித்தவ உலகம் கொண்டாடியது.

கத்தோலிக்கப் பாதிரியாராக இருந்த இவர் விவிலியத்தை முழுமையாக ஆய்வு செய்து, தான் ஆய்ந்து தேர்ந்த ஆய்வு முடிவுகளின் (தொண்ணூற்றைந்து ஆய்வறிக்கைகள்) அடிப்படையில் கத்தோலிக்க கிறித்தவத்தின் செயல்பாடுகளை எதிர்த்தார். பெரும் போராட்டத்தால் இயல்பான உண்மைகளை வெளிக்கொணர்ந்த இவர் கிறித்தவச் சமய புரட்சியாளர். இவரது துணிச்சல் மிக்க சீர்திருத்தத்தை கேள்விப்படாதவர் இருக்க முடியாது.

ஆனால் கத்தோலிக்க கிறித்தவப் பிரிவில் கன்னியாஸ்திரியாக இருந்து மார்ட்டின் லூதரின் இந்தப் புரட்சிக்குப் பின்னர் மனத்தெளிவடைந்து இவரையே கணவனாக அடைந்த கேத்தரின் வான் போரா என்பவரைப் பற்றி அநேகருக்குத் தெரியாது. இந்தக் கட்டுரையில் அவரைப் பற்றியும் கிறித்தவச் சமய நெறியாளரான மார்ட்டின் லூதர் குடும்ப தலைவனாக (ஒரு சிறந்த கணவர், தந்தை என்ற பாத்திரத்தில்) அவரது பங்களிப்பையும் பார்க்கலாம்.

கேத்தரின், ஜனவரி 29, 1499 இல் ஜெர்மனியின் லீப்ஜிக்கிற்கு (Leipzig) தெற்கே ஆறு மைல் தொலைவில் இருந்த லிப்பென்டோர்ஃப் (Lippendorf) என்ற இடத்தில் பிறந்தார். அவரது ஐந்தாவது வயதில் தாயார் இறந்தபோது, அவரது தந்தை அவளை ஒரு விடுதியோடான பள்ளியில் சேர்த்தார், பின்னர், அவளுக்கு ஒன்பது வயதாக இருந்தபோது, சாக்சோனியில் உள்ள நிம்ப்ஷனில் கன்னியாஸ்திரிகளை பயிற்றுவிக்கும் சிஸ்டர்சியன் கான்வென்ட்டில் சேர்த்தார். அங்கு அவளுக்கு நல்ல உணவும் போதுமான பாதுகாப்பும் தான் கிடைத்தது. ஆனால் சின்னஞ்சிறு வயதில் அவளோடு உறவாடுவதற்கான சமவயது தோழியர் கிடைக்க இயலாத சூழலாக இருந்தது. ஆயினும் அதில் தனது பள்ளிக் கல்வியோடு கன்னியாஸ்திரி பயிற்சியையும் முடித்து அக்டோபர் 8, 1515 இல், இயேசு கிறிஸ்துவை தனது மணவாளனாக ஏற்று அதிகாரப்பூர்வமாக கன்னியாஸ்திரி ஆனார்.

ஆனால் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு விட்டன்பர்க் பேராசிரியரான மார்ட்டின் லூதர் என்ற மாமனிதர் தனது வாழ்க்கையை மாற்றி சமய இயக்கத்தைத் தொடங்குவார் என்பதை அவள் அப்போது உணரவில்லை.

மார்ட்டின் லூத்தரால் ஏற்பட்ட சீர்திருத்தக் கோட்பாடு ஜெர்மனி முழுவதும் பரவியதால், ஏராளமான துறவிகள் மற்றும் கன்னியாஸ்திரிகள் கிறிஸ்துவின் போதகர்களாகவும் சீடர்களாகவும் சுதந்திரமடைந்து அவர்களுடைய, மடங்களிலிருந்து (convents, monasteries) தப்பிக்க முயன்றனர். அத்தகைய சுதந்திரத்தை விரும்பிய கன்னியாஸ்திரிகளில் சிலர் கடுமையாகத் தண்டிக்கப்பட்டனர், தப்பியோடிய சிலர் மீண்டும் அழைத்துவரப்பட்டு மிக மோசமான நிலைமையில் கொத்தடிமைகளாக்கப்பட்டனர். இந்நிலையில் நிம்ப்சன் என்ற (Nimbschen) கான்வென்ட்டில் இருந்த பன்னிரண்டு கன்னியாஸ்திரிகள் அங்கிருந்து எப்படியாவது வெளியேறிவிட விரும்புவதாக மார்ட்டின் லூதருக்குத் தகவல் கிடைத்தது. எனவே அவர் அவர்களைத் தப்பிக்க ஏற்பாடு செய்தார்.

அவரது திட்டத்தின்படி, ஒரு ஈஸ்டர் அன்று மாலை, (ஏப்ரல் 5, 1523) அவரது கொள்கைப்பற்றாளரான வணிகரும் துணிச்சல் மிக்கவருமான ஹென்றி மற்றும் அவரது மருமகன் லியோனார்ட் கொப்பே ஆகியோர், மிகப் பெரிய பீப்பாய்களை கன்னியாஸ்திரிகள் இருந்த அக்கான்வென்ட்டிற்குள் கொண்டுவந்து அங்கிருந்த பன்னிரண்டு கன்னியாஸ்திரிகளையும் பீப்பாய்க்களிடையே வைத்து, சாதுரியமாக வெளியே கொண்டு சென்றனர்.

ஹென்றி அந்த விடுதிக்குத் தேவைக்கான உணவுப்பொருளான மீன்களை இத்தகைய பீப்பாய்களுக்குள் அடைத்துக் கொண்டுவருவது வழக்கம். இருந்தும் லேசான சந்தேகமடைந்த ஒருவர் பீப்பாய்களில் என்ன எடுத்துச் செல்கிறீர்கள் என்று கோப்பிடம் கேட்டபோது, அவர் இதில் 'ஹெர்ரிங் மீன்கள்' உள்ளதென்று கூறினார்.

அந்த பன்னிரெண்டு பேரில் கன்னியாஸ்திரிகளாக இருந்த மூன்று சிறுமிகள் அவர்களது வீடுகளுக்குத் அனுப்பி வைக்கப்பட்டனர். மற்ற ஒன்பது பேர் விட்டன்பெர்க்கிற்க் நகருக்கு

அழைத்துச் செல்லப்பட்டனர். அங்கு இரண்டு ஆண்டுகளில் கேத்தரின் வான் போராவைத் தவிர மற்றவர்களுக்குத் திருமணமாகி குடும்பமாக வாழ்ந்தனர்.

அந்நிலையில் கேத்தரின் தன்னை விரும்பிய ஒருவனைக் காதலித்தார். ஆனால் அவன் அவரை விட்டு விட்டு வேறொருத்தியை திருமணம் செய்து கொண்டான். இது கேத்தரினின் மனத்தை மிகவும் பாதித்தது. இருப்பினும், கேத்தரினை பாஸ்டர் காஸ்பர் கிளாட்ஸை திருமணம் செய்து கொள்ளுமாறு மார்ட்டின் லூதர் அவளை வற்புறுத்தினார், ஆனால் கேத்தரின் மறுத்துவிட்டார். தொடர்ந்து லூதர் கேத்தரினை நல்லதொரு சமயப்பற்றாளனுக்கு மனைவியாக்க வேண்டுமென்று தன்னால் இயன்ற முயற்சிகளை எடுத்து தோல்வியடைந்தார்.

விட்டன்பர்க் நகரம் அந்த இரண்டு ஆண்டுகளில் கேத்தரினுக்கு ஒரு சிறந்த குடும்ப பெண்ணுக்குரிய அனைத்துத் தகுதிகளையும் கற்றுக் கொடுத்திருந்தது. இந்நிலையில் கேத்தரின் மார்ட்டின் லூதர் தன்னைத் திருமணம் செய்துக் கொள்ள விரும்பினால் தான் அதை ஏற்பதாக தெரிவித்தார். ஆனால் மார்ட்டின் லூத்தர் தயங்கினார். அவர் இல்லற வாழ்கைக்கு எதிரானவரல்ல, பிசாசின் தூண்டுதல்களையும் அவனது போதனைகளையும் எதிர்க்க வேண்டுமென்றால் பிரம்மச்சரியம் ஒழிந்து அனைவரும் திருமணம் செய்ய வேண்டும் என்று மற்றவர்களை வற்புறுத்தியவர்தான் அவர். மாதங்கள் செல்ல செல்ல மார்ட்டின் லூதர் பலவீனமடைந்தார்.

அந்நிலையில் தனது நண்பர் ஒருவருக்கு, **'நான் சாத்தானின் திட்டங்களுக்கு எதிராக கேத்தரீனை மனையாக்கி கொள்கிறேன்'** என்று எழுதி அனுப்பினார். அவர் திருமணம் செய்ய தயங்கியது திருமணம் சம்மந்தப்பட்ட பொருளாதார காரணிகளுக்காக அல்ல. அவர் தனது விலையுயர்ந்த புத்தகங்களுக்குகூட பணமோ மதிப்பூதியமோ (ராயல்ட்டி) வாங்கியதில்லை. வருமானம் தரும் நிலையான வேலையும் இல்லை. மேலும் தேவையிலுள்ளவர்களுக்கு தாராளமாக உதவும் பண்புடையவர். அதைப் போன்றே தனது மனைவியையும் தியாகங்கள் செய்யும்படி கட்டாயப்படுத்த தனக்கு உரிமை இல்லை என்ற அவரது எண்ணமே அதற்கான காரணமாக இருந்தது.

1525 ஆம் ஆண்டு ஜூன் 13 ஆம் தேதி டாக்டர் மார்ட்டின் லூதருக்கும் கேத்தரின் வான் போராவிற்கும் அவர்கள் வசித்து வந்த மாற்றப்பட்ட மடாலயமான ப்ளாக் க்ளோஸ்டரில் ஒரு தனியார் விழாவில் திருமணம் நடைபெற்றது. வழக்கப்படி, இரண்டு வாரங்களுக்குப் பிறகு, தேவாலயத்தில் ஒரு பொது விழாவும் நடந்தது. அதில் ஏராளமான நண்பர்கள் கலந்து கொண்டனர்.

அவர்களைப்பற்றி எதிரிகள் பரப்பிய அவதூறுகளை சிலர் நம்பினர், அவர்களுக்குப் பிறக்கும் முதல் குழந்தை அந்தி கிறிஸ்துவாகதான் இருக்கும் என்றுகூட கூறினான் ஒருவன். லூதருக்கு நாற்பத்திரண்டு வயது கேத்தரினுக்கு இருபத்தைந்து வயது. இந்தத் திருமணம் வெற்றிபெறுமா என்ற கேள்வி வேறு.

CWARREN W. WIERSBE

மூலநூல்- 50 People Every Christian Should know

கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

**மாத ஆய்விதழ் சந்தா விபரம்**

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**வங்கி விபரம்**

Name: Tinnevelly Christian Historical Society
A/c Number : 1748 020000 3684
Bank name : Federal Bank
IFSC code: FDRL0001748

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்"
மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள
G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும்
காசோலை மற்றும் வரைவோலை செலுத்த
'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்'
( Tinnevelly Christian Historical Society )
என்ற பெயரில் எடுக்கவும்

**ஆசிரியர்**

**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401, 91767 80001

christianhistoricalsociety.in
tchsportal.co.in
christianhistorical@gmail.com

# வரலாற்றுச் செய்தி

பேராயர். கால்டுவெல் நினைவு இல்லம் விரைவில் புதுப்பிக்கப்படும்

பேராயர். கால்டுவெல் பிறந்த நாள் விழா தமிழுக்கு ஒப்பிலக்கணம் எழுதிய பேராயர். கால்டுவெல் 209-வது பிறந்த நாள் விழா மே 7 ம் கொண்டாடப்பட்டது. இதையொட்டி இடையன்குடியில் உள்ள அவரது நினைவு இல்லத்தில் உருவ சிலைக்கு சபாநாயகர் அப்பாவு, நெல்லை மாவட்ட கலெக்டர் கார்த்திகேயன், மற்றும் சேகரகுரு பர்னபாஸ், மாலை அணிவித்து மரியாதை செலுத்தினர்.

பின்னர் சபாநாயகர் அப்பாவு அவர்கள் தமிழ் மொழிக்கு செம் மொழி அங்கீகாரம் கிடைக்க பேருதவியாக இருந்தவர் பேராயர் ராபர்ட் கால்டுவெல். இவர் வாழ்ந்த இல்லத்தை கடந்த 2009-ம் ஆண்டுமுதல்- அமைச்சராக இருந்த கருணாநிதி .அரசு நினைவு இல்லமாக மாற்றினார். மேலும் அவருக்கு தபால்தலை வெளியிட்டு பெருமைப்படுத்தினார். முதல்- அமைச்சர் மு.க.ஸ்டாலினின் திராவிட மாடல் ஆட்சிக்கு திராவிடம் என்ற வார்த்தையை முதன் முதலில் உலகிற்கு தந்தவர் கால்டுவெல், இவரது நினைவு இல்லம் கடந்த 10 ஆண்டுகளாக பராமரிப்பு இல்லாமல் உள்ளது. இதை தமிழ்நாடு முதல்-அமைச்சர் கவனத்திற்கு கொண்டு சென்றதையடுத்து விரைவில் புதுப்பிக்கப்பட உள்ளது. அதற்கான பணிகள் விரைவில் தொடங்கும். இவ்வாறு அவர் கூறினார்.

தமிழ்நாடு நீர்வளத் துறை அமைச்சர் திருமிகு. துரைமுருகன் மற்றும் சட்டப்பேரவை தலைவர் திருமிகு. அப்பாவு அவர்களும் இன்று இடையன்குடியில் உள்ள திராவிட ஒப்பிலக்கணத்தின் தந்தை மிஷனெரி கனம். பேராயர் கால்டுவெல் நினைவு இல்லத்தில் ஆய்வு செய்து அங்கு இருக்கும் சிறப்பு வருகை பதிவேட்டில் கையெழுத்து வைத்த பொழுது











தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ.மாதவைய்யா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்



## தொடர்– 27

நம்மவர்கள் இந்தியப் பெண்களை மணந்துகொள்வது எனக்குப் பிடிக்காது. ஆனால் உனக்கு நேர்ந்திருக்கும் நிலையில் அங்ஙனம் மணஞ்செய்து கொள்வது அனுமதிக்க வேண்டியதுமன்றி கடமையுமாகும் என்று சொல்வேன். பாவம்! மார்ட்டினுக்கும் சூலை நோய்தான். மனைவியும் இருக்கிறாள். சொந்த உறவுக்காரிதான். இருந்தும் இருவரும் வக்கிரமாக ஓயாது சண்டையிடுகிறார்கள். அது ஒரு விதிவிலக்கு. ஆனால் எந்த ஆங்கிலப் பெண்ணும் அவள் எவ்வளவுதான் நல்லவளும் கடமை உணர்ச்சி உள்ளவளாக இருந்தாலும் உன்னுடையவளைப் போல் உத்தம மனைவியாகவோ செவிலியாகவோ இருக்கமுடி யாது' என்றார் வெஸ்ட்காட்.

'அதற்காக கடவுள் அவளை ஆசீர்வதிப்பாராக' என்று மெலிந்த குரலில் சொன்னார் லிட்டில்டன். 'நான் சமீபத்தில் அவளிடம் சற்றுக் கடுமையாகவே நடந்துகொள்ளும்படி இதற்குள் நேரிட்டுவிட்டது' என்று கவலைப்பட்டார். கிளாரிந்தா மருந்துடன் உள்ளே வந்துவிட்டதால் அவர்கள் பேச்சு வேறு விஷயத்துக்குத் திரும்பிற்று.

வெஸ்ட்காட் போன பிறகு அவருடைய சொற்கள் லிட்டில் டன் நெஞ்சில் ஒலித்துக்கொண்டே இருந்தன. முன்னர் தஞ்சையில் நோயில்பட்டு எழுந்ததும் கிளாரிந்தாவுக்குச் செய்ததை நினைந்து வருந்தியதைவிட, இப்போது அதிகமாகவே அவளுக்காக வருந்தினார். கிளாரிந்தாவிடம் பரிவுடனும் பிரியத்துடனும் பேசி அவள் மன்னிப்பை மீண்டும் கோரினார்.

தழுதழுக்கும் குரலில், 'கண்ணே, நான் உன்னிடம் யோசனையில்லாமலும் கடுமையாகவும் நடந்து கொண்டிருக்கிறேன். இந்த நோயிலிருந்து பிழைத்து உனக்குக் கைம்மாறு ஏதாவது செய்யாவிட்டால், என்னால் நிம்மதியாக இறக்க முடியாது. உன் எளிய, அன்புமயமான மனதை நான் எவ்வளவெல்லாமோ நோகச் செய்துவிட்டேன். இப்போதும், நான் இறந்த பிறகும் என்னைப்பற்றி நீ எவ்வளவு கடுமையாக நினைக்கப்போகிறாயோ என்று அங்கலாய்த்தார்.

கிளாரிந்தா கண்களில் நீர்மல்க, 'அன்பே! அப்படி எல்லாம் பேசாதீர்கள். இந்த உலகத்தில் என்னைத் தனியாக விட்டுவிட்டு நீங்கள் மாத்திரம் போய்விடுவதாகச் சொல்லாதேயுங்கள். இங்கு வந்த நாளிலிருந்து என் இதயம் உங்களுக்காகத் தவித்த தவிப்பு அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும். நான் சொல்லியும் கேட்காமல் இந்தப் பயங்கரமான குடிப்பழக்கத்துக்கு உங்களை அடிமையாக்கிக்கொண்டீர்களே, அதை நினைத்தால்தான் எனக்கு எவ்வளவோ கஷ்டமாக இருக்கிறது. தவறு செய்யும் குழந்தைகளிடம் கருணை காட்டுவதுபோல கடவுள் இந்த ஒருதடவையும் உங்களிடம் கருணை காட்டுமாறு இரவும் பகலும் நான் கடவுளை நோக்கி ஜெபிக்காத நேரமில்லை. உங்கள் உடம்பு குணமாகி விட்டால் நீங்கள் பழையபடி மனத்தெம்பு பெற்றுவிடுவீர்கள். எனக்கும் மகிழ்ச்சி அளிப்பீர்கள். எல்லாம் சரியாகிவிடும்' என்றாள்.

லிட்டில்டன் அவள் கையை எடுத்துத் தன் கையில் வைத்து வருடிக்கொண்டே ஒன்றும் பேசாமல் சிறிதுநேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

பின் அமைதியும் உறுதியான குரலில், 'நான் இனிப்

பிழைக்கமாட்டேன். இன்று காலையிலிருந்து நோயின் வெளிப்படையான குறிகள் வேகமாகக் குறைந்துகொண்டே வருகின்றன. பார்ப்பதற்கு குணமானவன்போல் இருக்கிறேன். ஆனால் என் தலையை என்னவோ செய்கிறது. நோயின் உக்கிரம் வேறு திசையில் திரும்பியிருக்கிறது என்று நினைக்கிறேன். மூளைக்குத் தாவிவிட்டால் எந்த நிமிடமும் முடிவு ஏற்படலாம். இறப்பதற்கு முன் எனக்கு விடுதலை கிடைத்து, அவசியமானால் இந்தப் படுக்கையருகிலே உன்னை முறைப்படி திருமணம் செய்துகொள்ள கடவுள் சித்தம்கொண்டால் நன்றாக இருக்கும். அப்பொழுதுதான் நான் அமைதியாகச் சாகமுடியும்' என்றார்.

'என் அன்பே, இப்படி எல்லாம் பேசாதீர்கள்.

நம்பிக்கையை விட்டுவிடாதீர்கள். கடவுள் நிச்சயமாய் என் பிரார்த்தனைக்குச் செவிசாய்ப்பார். இந்த ஒருதடவையும் கருணை காட்டுவார். இன்று நீங்கள் தெளிவுடன் காணப்படுகிறீர்கள். இனி விரைவில் உடல் தேறிவிடுவீர்கள்.'

'இந்தத் தடவை கடவுள் எனக்கு இரங்கினாரானால், அது உனக்காகவேதான். அவருடைய தயைக்கும் கருணைக்கும் நான் பாத்திரமானவன் அல்ல. என் வாழ்க்கை முழுவதுமே நான் அவர் சித்தத்துக்குப் பணியாமல் எதிர்த்தே வந்திருக்கிறேன். அவர் நடுநடுவே காட்டிய கருணையையும் நான் சரிவரப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. முதல் முதலாவதாக, சாபத்தைப்போல் என் வாழ்க்கையைத் தொடர்ந்துவரும் அந்தப் பெண்ணை மணந்து, என் பெற்றோரின் மனதை நோகச் செய்தேன். பின் பச்சாதாபங்கொண்டு சிறிது காலம் இறைவன் காட்டிய வழியிலேயே நடக்க முயன்றேன். அப்பொழுதுதான் பெருநிதியைப் போன்ற உன் அன்பை அளித்து என் வாழ்க்கையை மலரச் செய்தார். ஆனால் முற்றும் முடிய அவர் கரங்களிலே அதை விட்டுவிடாமல் ஆத்திரப்பட்டு என் மனம்போல அதை அநுபவிக்கத் துடித்து அதனால் பிறருக்கு ஏற்படும் இன்னல்களை எண்ணிப்பாராமல் அற்பத்தனமாகவும் சுயநலத்தோடும் நடந்துகொண்டேன்.

'சோதனையைத் தாங்குகிறவனே பாக்கியவான், அவன் ஜீவ கிரீடத்தைப் பெறுவான் என்று பைபிள் சொல்லுகிறது. ஆனால், நானோ சிறிது காலம்கூடக் காத்திருக்க முடியாமல் சோதனையில் தோற்றுவிட்டேன். அதனால் என் பாடுகள் அதிகமாயின.

வெகு சீக்கிரத்தில் கிடைத்துவிடும்போல் தோன்றிக்கொண்டிருந்த விடுதலையையும் எனக்கு அளிக்க கடவுள் திருவுள்ளம் வரப்பிரசாதம்போல் வந்த உன்னையும் கொள்ளவில்லை.

இழிந்த முறையில் நடத்தியதால், என் தலையில் நானே மண்ணை வாரிப் போட்டுக்கொண்டேன். கருணையை எதிர்பார்க்க எனக்கு என்ன தகுதி இருக்கிறது? அவருடைய அடிக்கடி அவரை எதிர்த்த நான் எந்த முகத்தோடு என் வாழ்நாளை நீடிக்குமாறு அவரிடம் ஜெபிப்பேன்?' என்று கூறினார்.

கிளாரிந்தா பரிவு மிக்க குரலில், 'ஹாரி, உங்களை நீங்களே குறைவுபடுத்திக்கொள்ளக் கூடாது. இவ்வளவு மனச்சோர்வு கொள்ளுதலும் சரியல்ல. குற்றங்கள் இல்லாத மனிதர்கள் இந்தப் பூவுலகிலே கிடையாது. நீங்கள் இப்பொழுது வருந்துவது போல குற்றங்களுக்காக மனமார வருந்தினால் கடவுளின் எல்லையற்ற கருணைக்கும் மன்னிப்புக்கும் முன்னால் நமது பாவச் சுமை கரைந்துவிடும். மனந்திரும்ப அவசியமில்லாத தொண்ணூற்றொன்பது நீதிமான்களைக் குறித்து சந்தோஷம் உண்டாவதைப் பார்க்கிலும், மனம் திரும்புகிற ஒரே பாவியினிமித்தம் பரலோகத்தில் மிகுந்த சந்தோஷம் உண்டாயிருக்கும் என்று அவர் வாக்கருளவில்லையா? உங்களைவிடப் பாவிகள் பல பேரிருக்க நீங்கள் ஏன் உங்கள் குற்றங்களை மிகைப்படுத்துகிறீர்கள்? நீங்கள் தேவையில்லாமல் இப்படி மனச்சோர்வு கொள்வதால், உங்கள் நோய் அதிகரித்துவிடும். நீங்கள் அமைதியாகவும் நிர்ச்சிந்தையாகவும் இருக்கவேண்டும் என்று மருத்துவர் என்னிடம் சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்' என்றாள்.

அவளுடைய கையை எடுத்து முத்தமிட்டுக்கொண்டே 'என் அன்புக் கிளாரிந்தா, நீ என் காவல் தெய்வம். உனக்காகவாவது கடவுள் என் உயிரைக் காப்பாற்றி வைக்கட்டும். பின் உனக்குத் தகுந்தவனாக நடக்க முயல்வேன்' என்றார்.

அவள் அவரது நெற்றியில் முத்தமிட்டாள். அவள் உள்ளம் எதிர்காலத்தை எண்ணி மகிழ்ந்தது. அவர் விரைவில் குணமடைய வேண்டும் என்று உருக்கமாகப் பிரார்த்தித்தாள்.

ஆனால், நோயின் வெளி அடையாளங்கள் குறையவும், அது அவர் மூளையை அன்றிரவே தாக்கிற்று. பிரஞ்ஞை இழந்து பிதற்றத் தொடங்கினார். கிளாரிந்தாவை மணந்துகொள்ளும்படியாகக் கடவுள் தனக்கு விடுதலை அளிக்கவேண்டும் என்ற நினைவுடனேயே மயக்கம் உண்டாகி இவ்வுலகைவிட்டுப் பிரிந்து விட்டார்.

இந்தப் பேரிழப்பு கிளாரிந்தாவின் நெஞ்சில் சம்மட்டி கொண்டு அடித்ததுபோல் இருந்தது. அவளது துக்கத்தை விவரிக்க நமக்குச் சொற்கள் இல்லை. பாபாஜி இறந்தபோது அவள் அடைந்த துக்கத்தைவிட இந்தத் துக்கம் தாங்க முடியாததாக இருந்தது. இந்த வாழ்க்கையில் இனி யாரும் நிரப்ப முடியாத ஒரு வெறுமை அவள் நெஞ்சில் உண்டாயிற்று.

## அற்புத மருந்து

லிட்டில்டனோடு அந்தக் கல்யாணம் நடப்பதற்குமுன் கிளாரிந்தா தஞ்சையிலுள்ள கிறிஸ்தவ குடும்பங்களுடன் தொடர்பு கொண்டிருந்தாள். ஆனால், கல்யாணத்திற்குப்பின் அவர்மேல் கொண்ட அன்பாலும், மற்றும் படிப்பு, குடும்ப வேலைகளாலும் அவளுக்கு வேறு எதற்குமே நேரம் இல்லாமல் இருந்தது. பாளையங்கோட்டையில் இருந்தபோதோ அவமான உணர்ச்சி மேலிட்டிருந்ததால் வேண்டுமென்றே வீட்டினுள் அடைந்து கொண்டு வெளியுலகத்தோடு எந்தவித சமூக உறவுகளும் வைத்துக்கொள்ள விரும்பாதிருந்தாள்.

ஆங்கில சார்ஜென்ட் ஒருவனின் மனைவியான இந்தியக் கிறிஸ்தவப் பெண் மேரி என்பவள், கிளாரிந்தாவின் அழகு, பண்பாடு, செல்வம் இவைகளைப்பற்றிக் கேள்விப்பட்டு

அவளுடன் நட்புக்கொள்ள விரும்பிப் பலமுறை முயன்றும், முடியாது போய்விட்டது. இப்பொழுது லிட்டில்டன் திடீரென இறந்ததால் அந்நிய இடத்தில் தனியளாக நின்ற கிளாரிந்தா வைக் கண்டு ஆறுதல் சொல்ல வந்தாள். அவள் கிளாரிந்தாவின் முந்திய வாழ்வு குற்றமுள்ளது என்பதை மெல்லச் சுட்டிக்காட்டி, குற்றத்தை உணர்ந்து இரட்சகர் மீது தீவிர நம்பிக்கை வைத்தால் நல்வழி சேரலாம் என்று சொல்லிச் சென்றாள். மேரி தன்னை ஒரு பக்தியுள்ள கிறிஸ்தவளாகவும் வாஞ்சைமிக்க சுவிசேடகியாகவும் கருதிப் பெருமை கொண்டிருந்தாள். ஆனால், கிளாரிந்தாவுடன் பழகிய பின்பு தான் நினைத்ததுபோல் அவள் ஒழுக்கம் கெட்டவள் அல்ல, பண்பாடு மிக்கவள் என்பதை உணர்ந்துகொண்டாள்.

மேரியின் பேச்சு கிளாரிந்தாவுக்கு முதலில் அலுப்பைத் தந்தது. ஆனால், வர வர அவள் தன் குற்றங்களையும், வறுமையையும், மற்றும் துன்பங்களையும் பற்றியும் மனம் திறந்து பேசியபோது, கிளாரிந்தாவின் துயரமுற்றிருந்த நெஞ்சை அது தொட்டது.

மேரியின் கணவன் பாளையங்கோட்டைப் பட்டாளத்தில் சார்ஜென்டாக இருந்து வந்தான். அவன் மத வெறிகொண்ட கிறிஸ்தவன். சண்டையில் நூற்றுக்கணக்கான பேர்களைக் கொன்று, அவர்களது குற்றமுள்ள ஆத்துமாக்களை நித்திய நரகத்துக்கு அனுப்புவதைக் காட்டிலும் ஓர் அஞ்ஞானியை சத்தியமார்க்கத்துக்குக் கொண்டுவருவதுமேல் என்பது அவன் கருத்து. அவனது கிறிஸ்தவ வேலையாளின் மகள் தான் மேரி. கட்டுவாய்ந்த நல்ல அழகி. இவன் பிரசங்கம் செய்யும் இடங்களுக்கெல்லாம் தொடர்ந்து சென்று அவற்றை மிகக் கவனமாகக் கேட்பாள். இதனால் அவள்மீது காதல்கொண்டு தான் செய்யும் சுவிசேட பிரபல்ய வேலைக்குத் தகுந்த துணையாக இருப்பாள் என்றெண்ணி அவளைக் கலியாணம் செய்து கொண்டான். பிறரை மதம் மாற்றி ஞானஸ்நானம் கொடுப்பதில் கணவனுக்கு அனுசரணையாக இருந்தாள். அவள் இயல்பாகவே இரக்க சுபாவம் உடையவள். பிறர் துன்பத்தைக் கண்டால் மனம் உருகி அவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்று நினைப்பவள். ஆகவே நல்வழிப்படுத்த அவள் பாப ஆத்துமாக்களை மட்டும் தேடிக்கொண்டிருக்கவில்லை. அவளுடைய பரோபகார வேலைகளுக்குப் போதுமான பண உதவி செய்யக்கூடிய செல்வந்த வள்ளல்களையும் தேடிக்கொண்டிருந்தாள். வறுமையுடையோர்க்கும் அல்லலுற்றோர்க்கும் பஞ்சமா என்ன! அவர்கள் தேடாமல் கிடைத்தனர். ஆதலால் அவள் கிளாரிந்தாவின் உறவை விரும்பியதற்கு பல காரணங்கள் இருந்தன. கிளாரிந்தா தன்னைவிடவும் பக்தியும் கிறிஸ்தவ சித்தாந்த ஞானமும் அதிகமாகவே உள்ளவள் என்பதைப் பழகிய பிறகு புரிந்துகொண்டாள். தான் நேரில் கண்ட துன்பக் கதைகளை எல்லாம் கிளாரிந்தாவிடம் சொல்லலானாள். பாவத்திலும், பட்டினியிலும், நோயிலும், மற்றும் அல்லல்களிலும் உழன்று தவிக்கும் மக்களைப்பற்றியும், அவர்களை அவற்றிலிருந்து மீட்க தான் எடுத்துக்கொள்ளும் முயற்சிகளைப் பற்றியும் சொன்னாள். தானாகவே சுமத்திக்கொண்ட இந்த உயரிய வேலையில் அவள் தன்னையே மறந்து உண்மையுடன் உழைப்பதைக் கிளாரிந்தா கண்டாள். அவள் களங்கமில்லாமல் எளிமையாகப் பேசுவதும் கிளாரிந்தாவுக்கு பிடித்திருந்தது. ஆகவே அவளும் அந்த வேலையில் சிரத்தைகொள்ளலானாள்.

முதலில் அவள் துக்கம் ஆறுவது கடினமாக இருந்தது. சின்னக் கோபாலன் அவள் சோகத்தை மாற்ற சற்று உதவியாக இருந்தான். அவன் அவளையே சுற்றி வந்தான். அவளும் தன் எண்ணங்களைக்கூட அவனிடம் சொல்லுவாள்.

லிட்டில்டன் அவளுக்கு விட்டுச் சென்ற சொத்து அதிகமாகவே இருந்ததால் அதை நிர்வகிக்கும் வேலையும் இருந்தது. சாரதா தஞ்சைக்குத் திரும்பிவிடலாம் என்று சொல்லிப் பார்த்தாள். ஆனால், கிளாரிந்தா அதை விரும்பவில்லை. லிட்டில்டன் தன் கடைசி நாட்களைக் கழித்த அதே வீட்டில் வசித்து, அவரது கல்லறைக்கு அடிக்கடி சென்று மலர் அஞ்சலி செலுத்திவிட்டு வருவது அவளுக்கு ஓரளவு ஆறுதலைத். தந்தது.

அவர் இறப்பதற்குச் சிலமணி நேரங்கள் முன்னதாக அவர்கள் நிகழ்த்திய உரையாடல் அவள் மனதில் மீண்டும் மீண்டும் ஒலித்தது. அவர் நினைவை இனிமையாக்கியது. ஆனால் சுகமளிக்கும் காலத்தின் கரமோ அல்லது அவள் அருமைச் சிறு மகனே என்று பிரியமாய் அழைத்த குழந்தை கோபாலனின் மழலையோ, அவள் துக்கத்தை மாற்றவில்லை. மேரி காட்டிய புது வாழ்க்கையும் புது முயற்சிகளுமே அவள் சோகத்தை. மறக்கடித்தன. வாழ்க்கையில் அசாதாரண துன்பங்களை அனுபவித்தவளே ஆயினும், செல்வத்திலும் ஆடம்பரத்திலும் பிறந்து வளர்ந்தவளாதலால் பசி, பட்டினி, அழுக்கு, நோய் முதலிய துன்பங்களை நேருக்கு நேர் இதுவரை கண்டவள் அல்ல. உயர்குலப் பெண்ணானபடியால் அவள் வாழ்ந்த. பாதுகாப்பான சூழ்நிலையில் இவ்விதத் துன்பங்கள் தலை காட்டவே இல்லை. முதல் முதலாக அவைகளைக் கண்டபோது பெரிய கண் திறப்பாக இருந்தது. கூடியவரையில் பிறருடைய துன்பங்களை அகற்ற முயற்சியெடுத்தாள்.

சில சமயங்களில் மேரியின் இளகிய மனதால் தூண்டப்பட்டுப் பாத்திரம் அறியாமலே பிச்சையிட்டுவிடுவாள். ஆனால் கிளாரிந்தாவுக்கு இருந்த இயற்கையான பொது அறிவு, நாளடைவில் அம்மாதிரித் தவறுகளைச் செய்துவிடாமல் அவளைக் காத்தது. தங்களுக்கே உதவி செய்துகொள்பவர்களுக்குத்தான் கடவுளும் உதவிசெய்கிறார் என்னும் பழமொழியின் உண்மையைப் புரிந்துகொண்டவளாய் அளவோடு தர்மம் செய்தாள்.

ஆத்திர, அவசரத்திற்கு உதவிகள் செய்வதோடல்லாமல், ஏழைக் குழந்தைகள் படிக்குமாறு தன் வீட்டிலேயே ஓர் இலவசப் பள்ளிக்கூடமும் தொடங்கினாள். அவர்கள் அன்பையும் நம்பிக்கையையும் பெறுவதற்காக அவர்களுக்கு அவளே படிப்பும் சொல்லிக்கொடுத்தாள். அந்தக் குழந்தைகள் அவளை அம்மா என்று அழைத்தபோது மகிழ்ச்சியால் பூரித்துப் போனாள். அவளுடைய ஆர்வம் சாரதாவையும் தொற்றியது. அவளும் அவளுடைய மகன் கோபாலனும் பள்ளியில் மாணாக்கர்களாகித் தமிழ் எழுதவும் வாசிக்கவும் கற்றுக்கொள்ளத் தொடங்கினார்கள். புராணங்களிலிருந்தும்

பைபிளிலிருந்தும் கிளாரிந்தா குழந்தைகளுக்குக் கதைகள் சொன்னாள். இதுவே எல்லாவற்றையும்விட அவளுக்கும் அவள் மாணாக்கர் அனைவருக்கும் மிகவும் பிடித்திருந்தது. கதைகள் மிகவும் சுவையாக. இருந்ததோடல்லாமல், சொல்வதற்கு நிறையவும் இருந்தன.

இவ்வாறான பல பணிகளால் அவள் தன் துக்கத்தை மறந்து வாழ்க்கையைப் பயனும் ஆக்கமுமுள்ள தாக்கிக் கொண்டாள். இதயம் புண்பட்டு வாழ்க்கை அலுத்துப்போன வேளையில், வாழ்க்கைக்குப் புது நோக்கமும் புது இன்பமும் தரும் அற்புத மருந்தாக அவை வேலை செய்தன.

கிளாரிந்தா ஆற்றிவந்த பணிகள் கலைக்டர், தளகர்த்தர், மற்றும் பல ஐரோப்பிய அதிகாரிகளின் கவனத்தையும் ஆர்வத்தையும் கவர்ந்தன. கிளாரிந்தாவைப்பற்றிய உயர்வான எண்ணம் அவர்களிடையே தோன்றி நிலவியது. லிட்டில்டன் இறந்தவுடன் அவளுடைய பணத்துக்காகவும், அழகுக்காகவும் அவளைத் தங்கள் ஆசைநாயகியாக்கிக் கொள்ளலாம் என்று நப்பாசை கொண்டிருந்த ஒருசில இழிந்த மனப்பான்மையுடைய அதிகாரிகள் வெட்கித் தலைகுனிந்தார்கள்.

கிளாரிந்தா இன்னும் ஞானஸ்நானம் பெறவில்லை என்பது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம். மதம் மாற்றுவதில் நிபுணரான மேரியின் கணவர் அவளை ஞானஸ்நானம் பெறும் படி அடிக்கடி சொல்லிவந்தார். அவள் காரணம் எதுவும் சொல்லாமல் மறுத்துவந்தாள். சில ஆண்டுகள் கழிந்தன. இப்படி இருக்கையில், ஜியார்ஜ் வெஸ்ட்காட்டுக்கும் ஆன்மிரின் என்னும் பெண்மணிக்கும் திருமணம் நிச்சயம் ஆயிற்று. தங்கள் திருமணத்தை நடத்துவதற்கு ஓர் ஐரோப்பிய குரு தான் வரவேண்டுமென்று விரும்பினார் வெஸ்ட்காட். ஆகவே வெஸ்ட்காட் சுவார்ட்ஸை பாளையங்கோட்டைக்கு வருமாறு அழைத்தார். அப்போது மதுரையிலும், திருநெல்வேலியிலும் ஞானஸ்நானம் பெறுவதற்காக நிறைய குழந்தைகளும் காத்திருந்தனர்.

அந்த ஜெர்மன் மகானும் வெஸ்ட்காட் அழைப்புக்கு இணங்கி திருச்சிராப்பள்ளியிலிருந்து புறப்பட்டு பல இடங்களில் தங்கித் தங்கி 1778 பெப்ருவரி மாதக் கடைசியில் தச்சநல்லூர் வந்து சேர்ந்தார். அங்கிருந்த இந்தியப் பட்டாளத்திலுள்ள கிறிஸ்தவர்களின் ஆன்மீகத் தேவைகளைக் கவனித்துவிட்டு அன்று பிற்பகல் பாளையங்கோட்டைக்கு வந்துசேர்ந்தார் சுவார்ட்ஸ். மறுநாள் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்க சுவார்ட்ஸ் தயாராக இருந்தபோது கிளாரிந்தா தனது வளர்ப்பு மகன் கோபாலனோடும், பணிப் பெண் சாரதாவோடும் அங்கு வந்து ஞானஸ்நானம் வேண்டினாள்.

மிஷனெரி சுவார்ட்ஸ் அவளைத் தஞ்சையில் பார்த்து ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டிருந்தன. அவரால் அவளை உடனே அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அவள் தன்னை அடையாளம் சொல்லி நினைவூட்டி தற்பொழுதுள்ள தன் மாறிய நிலையையும்பற்றி சுருக்கமாக விளக்கினாள். உள்ளூரிலும் சுற்றுவட்டாரத்திலுமுள்ள ஐரோப்பிய இந்திய கிறிஸ்தவர் அனைவரும் கிளாரிந்தாவை ஒருமுகமாகப் புகழ்ந்து போற்றியதையும் சுவார்ட்ஸ் கண்டார். அவர் அவளுக்கு ஞானஸ்நானம் அளிக்க உவகையுடன் ஒப்புக்கொண்டார்.

1778ம் ஆண்டு மார்ச்சு மாதம் மூன்றாம் தேதி கிளாரிந்தா அந்த மாபெரும் மிஷனெரியின் கையால் ஞானஸ்நானம் பெற்றாள். அவளுக்குக் கிளாரிந்தா என்றும், வளர்ப்பு மகனுக்கு ஹென்றி லிட்டில்டன் என்றும், சாரதாவுக்கு சாராள் என்றும் பெயர் வழங்கி ஞானஸ்நானம் அளித்தார் சுவார்ட்ஸ். கிளாரிந்தாவின் வாழ்க்கையில் அது ஒரு மாபெரும் திருநாளாகும்.

## பணி செய்து கிடப்பதே

கிளாரிந்தா இரட்சகராக ஏற்றுக்கொண்ட கடவுளுடைய குமாரன், தான தருமங்களை அந்தரங்கமாகச் செய்யவேண்டும் என்று தம்மைப் பின்பற்றியவர்களுக்கு அடிக்கடி எச்சரிக்கை விடுத்தார். அவர் சொன்னார்: 'நீ தர்மஞ்செய்யும் போது மனுஷரால் புகழப்படுவதற்கு மாயக்காரர் ஆலயங்களிலும் வீதிகளிலும் செய்கிறதுபோல உனக்கு முன்பாகத் தாரை ஊதுவியாதே; மேலும் உன் வலதுகை செய்கிறதை உன் இடதுகை அறியாதிருக்கக்கடவது,' என்றார். கிளாரிந்தாவின் இறுதி நாட்களின் விவரங்களை நாம் சுருக்கமாகச் சொல்லுவதின் காரணமும் அதுவேயாகும். அவள் ஞானஸ்நானம் பெற்று தன் ஆண்டவரின் பனிச் சின்னத்தை தரித்தபின் செய்தவற்றை இங்கே சுருக்கியே சொல்லிவிடுவோம்.

கிளாரிந்தாவின் அறிவும் ஆற்றலும் மீண்டும் தலையெடுத்து செயல்படத் தொடங்கின. ஆனால் அவை முற்றிலும் வேறுபட்ட எல்லையில் செயல்புரிந்தன. புராட்டஸ்டான்டு சித்தாந்தங்களை நன்கு கற்றறிந்தாள். ரோமன் கத்தோலிக்கர்களும் புராட்டஸ்டான்டியர்களும் அவள் வீட்டில் கூடி சர்ச்சைகளையும் தத்துவ விசாரணைகளையும் நடத்தினர். கிளாரிந்தாவும் அவற்றில் பங்கெடுத்து புராட்டஸ்டான்டுக் கொள்கைகளில் தனக்கிருந்த பற்றை மிகத் திறமையாக விளக்கினாள். இதன் பயனாக சில ரோமன் கத்தோலிக்கர்கள் புராட்டஸ்டான்டு பிரிவுக்கு வந்ததாகவும் குறிப்புகள் கிடைக்கின்றன.

தேரிவிளை பாளையங்கோட்டைக்குத் தெற்கில் சில மைல்கள் தள்ளி என்றொரு கிராமம் இருக்கிறது. அக்கிராமம் கிளாவிருந்தாவிடம் அடைமானமாக இருந்தது. அக் கிராமத்திலிருந்து சாணார் வகுப்பைச் சேர்ந்த இரண்டு குடும்பத்தினர் கிறிஸ்தவ மதத்தில் சேர்ந்தனர். இவர்களே இந்த வகுப்பிலிருந்து வந்த முதல் கிறிஸ்தவர்கள் என்று சொல்லப்படுகிறது.

தன் வீட்டில் வைத்தே இந்து சகோதர சகோதரிகளுக்கு கிறிஸ்தவ சுவிசேஷத்தை எடுத்துரைத்தாள். அவளுடைய சமயச் சொற்பொழிவுகளுக்கு நல்ல பலன் கிடைத்தது. தனது பணியில் உதவியாக இருக்கும்படி, தன் செலவிலே மரிய சவரி என்ற பெயருடைய உபதேசியாரை நியமித்துக்கொண்டாள். அவள் தர்மங்கள் வளர்ந்துகொண்டே போயின. லிட்டில்டன் அவளுக்கு வைத்துச் சென்ற சொத்துக்களை

பிறர் துன்பங்களைத் துடைப்பதற்குத் தங்குதடையின்றித் தாராளமாகச் செலவிட்டு வந்தாள்.

கிறிஸ்தவ சமயத்துக்காக அவள் செய்த தொண்டு நல்ல பலனைத் தந்தது. பாளையங்கோட்டையில் ஐரோப்பியரும் இந்தியருமாகச் சேர்ந்து திருச்சபை கணிசமான அளவில் பெருகியிருந்தது. ஆனால் அங்கு ஒரு புராட்டஸ்டான்டு ஆலயம் இல்லையே என்ற குறை அவள் உள்ளத்தை உறுத்தியது. அந்தக் குறையை தானே போக்க ஆர்வத்துடன் முன்வந்தாள். தனது அன்புக்குரியவரின் பூதவுடலை வைத்த கல்லறைக்கு அருகே ஒரு சிற்றாலயத்தை 1783ம் ஆண்டு தன் செலவிலேயே கட்டி முடித்தாள். அவ்வாலயம் இன்றும் இருக்கின்றது. இன்று அகில இந்தியாவிலும் கிறிஸ்தவர்கள் எண்ணிக்கை அதிகமாகவுள்ள திருநெல்வேலி மாவட்டத்தில் கிளாரிந்தா கட்டிய ஆலயமே முதல் முதல் தோன்றிய புராட்டஸ்டான்டு ஆலயமாகும்.

இதற்குச் சற்று முன்னர் 1780ல் பாளையங்கோட்டைக்கு விஜயம் செய்த மறைதிரு. போல் கிளாரிந்தாவைப் பற்றி பின்வருமாறு எழுதுகிறார்: 'அவள் கிறிஸ்தவ மதத்தை விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டிருப்பதாக அறிகிறேன். அவளைச் சுற்றியுள்ளோரின் நலனைப்பற்றியும் அவள் மிகவும் அக்கறை கொண்டிருக்கிறாள். அவளைச் சந்திக்கக் கிடைத்த வாய்ப்புக்காக நான் மகிழ்ச்சியுறுகிறேன்' உண்மையில், இப்படி ஒரு ஐரோப்பிய மிஷனெரியால் உன்னதமாகப் புகழப்பெறுவது மிகச் சிறப்பானதாகும். போல் அவ்வமையம் கிளாரிந்தாவின் இன்னொரு வேலையாளுக்கு யோவான் என்று பெயரிட்டு ஞானஸ்நானம் அளித்தார். தரங்கம்பாடியில் உள்ள ஒரு இந்திய உபதேசியார், 'அவளுடைய ஆழ்ந்த ஞானத்தையும் முன்மாதிரி வாழ்க்கையையும் புகழ்வதற்கு எனக்குச் சொற்கள் போதா' என்று சான்று பகருகிறார்.

ஆலயம் கட்டி முடித்ததும் எந்தத் தூய நோக்கத்திற்காக அவ்வாலயம் எழுந்ததோ அதற்காக அதைப் பிரதிஷ்டை செய்யவும் நாடினாள். அப்பொழுது பாளையங்கோட்டையில் ஒரு மிஷனெரியும் இல்லை. ஆரம்பித்த நற்பணியைப் பரப்பவும், தொடர்ந்து நடத்தித்தரவும் தகுந்த இந்திய குருகூட இல்லை. இதுவும் அவளுக்குக் கவலையளித்தது. இளைஞனாக வளர்ந்துவிட்ட அவளுடைய தத்துப் புத்திரன் ஹென்றி லிட்டில்டனை ஜெர்மன் மகானான சுவார்ட்ஸின் நேரடிப் பார்வையில் விட்டுவைத்து அவரிடம் கல்வி கற்குமாறு விரும்பினாள். இந்த மூன்று விருப்பங்களையும் மனதில் கொண்டவளாய் தனது வளர்ப்பு மகன் ஹென்றி லிட்டில்டனையும் கூட இரண்டு ஆர்வமுள்ள கிறிஸ்தவர்களையும் அழைத்துக்கொண்டு மீண்டும் தஞ்சை வந்தாள் கிளாரிந்தா. சுவார்ட்ஸ் 1784லிலிருந்து தஞ்சாவூரைத் தமது தலைமை இருப்பிடமாகக் கொண்டிருந்தார். கிளாரிந்தா தஞ்சாவூருக்குச் செல்வதற்குமுன் அவளிடம் அத்யந்த விசுவாசத்துடன் உழைத்த சாரதா இறந்துவிட்டிருந்தாள். அடக்க ஆராதனையில் கிளாரிந்தா குழந்தையைப்போல் தேம்பித் தேம்பி அழுதாள்.

கிளாரிந்தாவின் குண இயல்புகளில் சிறப்பாகக் குறிப்பிடப்படவேண்டிய அம்சம் ஒன்று உண்டு. அவளுடன் உழைத்தவர்கள் அனைவரும் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்தவர்களாவர். பரம தந்தையின் பார்வையில் அவர் பிள்ளைகள் அனைவரும் சமமானவர்கள் என்ற கிறிஸ்தவக் கொள்கையைப் பரிபூரணமாகக் கடைப்பிடித்து வந்தாள். பாளையங்கோட்டையிலும் பிற இடங்களிலுமுள்ள அவள் சக மதத்தினர் அவளிடமிருந்து கற்றுக்கொள்ளவேண்டிய பாடங்களுள் இதுவும் ஒன்றாகும்.

அவள் வடக்கே சென்றிருக்கும் போது ராமநாதபுரத்திற்கும், தரங்கம்பாடிக்கும் சென்றுவர வாய்ப்புக் கிடைத்தது. சுவார்ட்ஸிடம் அவள் எதிர்பார்த்த காரியத்திலும் மிக்க வெற்றிகண்டாள். அவர் அவளுடன் ஞானப்பிரகாசம் என்ற புகழ்மிக்க உபதேசியாரை அனுப்பிவைத்தார். சில மாதங்கள் கழித்து ஞானப்பிரகாசத்தின் மாமனாராகிய ராயப்பன் என்ற குருவையும், அவரால் மிகத் திறமைசாலியாக மதிக்கப்பெற்ற உபதேசியார் சத்தியநாதனையும் பாளையங்கோட்டைக்கு அனுப்பிவைத்தார். கிளாரிந்தாவின் ஆர்வபூர்வமான விருப்பத்திற்கு இணங்கி சுவார்ட்ஸ் இரண்டாம் தடவையாக 1785ம் ஆண்டு பாளையங்கோட்டைக்கு விஜயம் செய்து அவள் கட்டிய சிறிய ஆலயத்தைப் பிரதிஷ்டை செய்தார். கிளாரிந்தாவின் வாழ்க்கையில் அந்நாளும் ஒரு பெருநாளாகும்.

அவள் தஞ்சைக்குச் சென்றிருந்தபோது தன் பாட்டனாரின் கல்லறையை தரிசிக்க வல்லத்துக்குச் சென்றாள். ஆனால் ஹைதர் அலி அண்மையில் அங்கு எழுப்பிய படையெடுப்பால் அது இருந்த இடமே தெரியாமல் அழிந்துவிட்டிருந்ததைக் கண்டு மிக்க கவலையடைந்தாள்.

தஞ்சாவூரை நவாப் ஆக்கிரமித்தபோது மலையூர் கிராமமும் போய்விட்டது. அவளுடைய அறப்பணிகள் நிறுத்தப்பட்டு விட்டன. துளசாஜி மீண்டும் அரியணையில் அமர்ந்திருந்ததால் அது விஷயமாக அவரிடம் கிளாரிந்தா மனுச் செய்து கொண்டாள். ஆனால் பலன் எதுவும் இல்லை. தஞ்சைக்கும் அவளுக்கும் இருந்த ஒரே தொடர்பு இப்படித் திடீரென அறுந்துவிட்டது. நிரந்தரமாக இருக்கக்கூடியவை என்று அவள் எண்ணியிருந்த அறப்பணிகளும் இவ்வாறு நின்று விடவே அவள் பாளையங்கோட்டையில் அறப்பணிகளுக்காகத் தனது செல்வத்தை மேலும் தாராளமாகவே செலவிட்டாள். உள்ளார்ந்த அனுதாபத்துடனும் இன்முகத்துடனும் அவள் தர்மம் செய்தமையால் அவற்றைப் பெற்றவர்கள் மனம் குளிர்ந்தனர். தர்மத்தின் மதிப்பும் நூறு மடங்காக உயர்ந்தது. துன்புற்ற குடும்பங்களும், ஏழைக் குடும்பங்களும் அவள் பெயரை வாழ்த்தின. 'உயரிய உள்ளங்கள் செயல்பட உயரிய தொண்டுகள் இருந்துகொண்டே இருக்கின்றன" என்ற கவிஞர் வாக்கை அவள் வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் நன்றாக உணர்ந்தாள்.



# பாப்பான்குளம் திருச்சபை வரலாறு

ஜே ஜான் ஞானராஜ்

திருநெல்வேலியில் இருந்து முக்கூடல், பாப்பாக்குடி, கடையம் வழியாக தென்காசி செல்லும் நெடுஞ்சாலையில் சுமார் 35 கிலோ மீட்டர் தொலைவில் பாப்பான்குளம் உள்ளது. இக்கிராமத்தின் தென்மேற்கே இராமநதி எனும் தாமிரபரணி ஆற்றின் துணை ஆறும் கடனாநதி எனும் தாமிரபரணி ஆற்றின் துணை ஆறும் ஒன்றாக கலக்கிறது. இராமநதி ஆற்றின் வடகீழ் கரையில் பாப்பான்குளமும் தென்மேல் கரையில் ஆழ்வார்குறிச்சியும் உள்ளது.

**பாப்பான்குளம் - பெயர் காரணம்**

இராமநதியும் கடனாநதியும் கலக்கும் இடத்தின் வடபுறம் இக்கிராமத்தில் பிராமணர்கள் வசிக்கும் அக்கிரகாரம் உள்ளது. பழங்காலத்தில் அதிக அளவில் இங்கு பிராமணர்கள் வசித்ததாக சொல்லப்படுகிறது. பழங்காலத்தில் பிராமணர்கள் பார்ப்பனர்கள் என்று அழைக்கப்பட்டனர். பார்ப்பனர் என்பது பாப்பான் என மருவி அழைக்கப்பட்டது. இக்கிராமத்தைச் சுற்றி குளங்கள் உள்ளன. மேலும் இக்கிராமத்தைச் சுற்றியுள்ள வயல் நிலங்களும் குளங்களும் பாப்பான் கால்வாய் மூலம் பாசன வசதியைப் பெறுகின்றன. இவற்றின் காரணமாக பாப்பான்குளம் என்று அழைக்கப்படுகிறது.

**அறிமுகம்**

2011 மக்கள் தொகை கணக்கெடுப்பு படி பாப்பான்குளத்தில் 5192 பேர் வசிக்கின்றனர். அம்பாசமுத்திரம் சேகரத்தில் தென்பகுதியில் கல்லிடைக்குறிச்சியில் இருந்து மணிமுத்தாறு செல்லும் பாதையில் ஒரு பாப்பான்குளம் இருந்தபடியினால் அது தெற்கு பாப்பாங்குளம் என்றும் கடையம் செல்லும் பாதையில் உள்ள இந்த பாப்பான்குளம் வடக்கு பாப்பான்குளம் என்றும் வேறுபடுத்திக் காட்டப்படுகிறது.

**பாப்பான்குளத்திற்கு நற்செய்தியும் கிறிஸ்தவமும்**

ரேனியஸ், பெற்றிட், சார்ஜென்ட் ஆகிய மிஷனரிமார்களின் காலத்தில் நற்செய்தி அறிவிக்கப்பட்ட போதும் இக்கிராமத்தார் கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. சார்ஜென்ட் ஐயரவர்களுக்குப் பின் 1897 வரை உவாக்கர் ஐயரவர்கள் சி.எம்.எஸ் மிஷனின் தலைமை மிஷனரி ஆக பணி செய்துள்ளார்கள். அவர்கள் காலத்திலும் இங்கு கிறிஸ்து மார்க்கம் வரவில்லை 1897 முதல் 1915 வரை மிஷனரி கனம். கார் ஐயரவர்கள் சி.எம்.எஸ் மிஷனின் தலைமை மிஷனரி ஆகவும் மாவட்ட சர்ச் கவுன்சில் தலைவர் எனும் சி.எம்.எஸ் மிஷன் நிர்வாகத்தின் உயர் பொறுப்பையும் வகித்து வந்தார்கள். நற்செய்தி அறிவிப்பதில் ஆர்வம் மிகுந்த இவர்கள் காலத்தில் அக்கால ஒன்றுபட்டத் திருநெல்வேலி திருமண்டலம் எங்கும்

ஏராளமான இடங்களில் சபைகள் உருவானது. இச்சபைகள் கார் மிஷனரி கால சபைகள் என அழைக்கப்படுகின்றன. 1912 இல் ஒரு குடும்பத்தைச் சார்ந்த ஐந்து ஞானஸ்நானம் பெற்றவர்கள் மட்டுமே பாப்பான்குளம் திருச்சபையில் இருந்துள்ளார்கள் இதை உற்று நோக்குகையில் கார் மிஷனரி காலத்தில் இங்கு சபை உருவாகி இருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

**திருச்சபையின் முதல் கிறிஸ்தவ குடும்பம்**

பாப்பான்குளம் நாடார் தெருவில் பெரியவர் ஒருவர் கிறிஸ்தவ மதத்தை ஏற்றுக் கொண்டார் அவருக்கு யோவான் என்ற பெயரில் திருமுழுக்கு கொடுக்கப்பட்டது. இக்குடும்பத்தாரின் பூர்வீகம் கோபாலசமுத்திரம் என ஒரு கருத்து சொல்லப்படுகிறது. யோவான் நாடாருக்கு சுவாமிதாஸ் என்ற மகனும் அன்பாயி என்ற மகளும் இருந்தனர். யோவான் நாடாருக்கு திருநெல்வேலியில் இருந்து முக்கூடல் கடையம் வழியாக தென்காசி செல்லும் மெயின் ரோட்டில் பெரிதானதொரு நிலம் இருந்தது. அந்த நிலத்தின் ஒரு பகுதியை தேவாலயம் கட்ட அவர் கொடுத்தார். அந்த இடத்தில் தூய யோவான் தேவாலயம் என்ற பெயரில் தேவாலயம் கட்டப்பட்டது. பாப்பான்குளத்தில் CMS கிறிஸ்தவ சபை ஏற்படுத்தப்பட்ட காலகட்டத்திலும் அதன் பின்பும் முருகாண்டியூர், அணைந்தபெருமாள் நாடானூர், வெள்ளிகுளம், கலிதீர்த்தான்பட்டி பாட்டப்பச்சேரி எனப்படும் பாட்டத்தெரு மயிலப்பபுரம், சிவநாடானூர் ஆகிய கிராமங்களில் சில குடும்பங்கள் கிறிஸ்தவத்தை ஏற்றனர் அவர்கள் பாப்பான்குளத்தில் அமைந்திருந்த தூய. யோவான் தேவாலயத்திற்கு வந்து ஆண்டவரை வழிபட்டனர்.

**இடைக்கால பாப்பான்குளம் திருச்சபை**

பாப்பான்குளம் திருச்சபையில் முதல் கிறிஸ்தவரான யோவான் நாடாரின் மகன் சுவாமிதாசின் வழியில் அவரது மகன் யோவான் நாடார் அவர்களும் யோவான் நாடாரின் மகள் அன்பாயியின் வழியில் அவரது மகன் இரத்தின நாடார் அவர்களும் சபையின் முக்கியஸ்தர்களாக இருந்தனர். அந்த காலகட்டத்தில் பாப்பான்குளத்தில் சிதம்பரவடிவு ஆசிரியை அவர்கள் குடும்பத்தார் கிறிஸ்தவத்தை ஏற்றார்கள். 1960 இல் பாப்பான்குளத்தைச் சேர்ந்த புஷ்பம் திருமுழுக்கு பெற்றார்கள். புஷ்பம் அவர்களை செய்துங்கநல்லூரைச் சொந்த ஊராகக் கொண்ட திரு.தேவதாஸ் ஆசிரியர் அவர்கள் 1960 இல் திருமணம் செய்தார்கள். பாப்பான்குளத்தில் இத்தம்பதியினர் குடியேறினார்கள். 1972 முதல் 1980 வரை சபை ஊழியராக இங்கு பணி செய்த திரு. ஜான் ஜேக்கப் உபதேசியார் அவர்களது காலத்தில் இங்கு சிறப்பான முறையில் முன் மண்டபம் கட்டப்பட்டது.

**பாப்பான்குளம் திருச்சபையில் இருந்து புதிய திருச்சபை எழும்புதல்**

பாப்பான்குளம் கிராமத்திற்கு வடபுறத்தில் இருந்த அணைந்த பெருமாள் நாடாரூரில் (APN) அம்பாசமுத்திரம் சேகர குருவானவராக அருள்திரு. நெல்சன் ஜெபத்துரை ஐயரவர்கள் இருந்த காலத்தில் புதிய சபை உருவாகியுள்ளது. அந்த ஊரில் உள்ள திரு. பொன்னுச்சாமி ஆசிரியர் அவர்களால் நடத்தப்பட்டு வந்த ரோஸ்லின் தொடக்கப்பள்ளியில் இந்த சபையின் தேவாலய வழிபாடு தொடக்க காலத்தில் நடைபெற்று வந்தது. பின்னர் பொன்னுச்சாமி ஆசிரியர் குடும்பத்தாரால் தேவாலயம் கட்ட இடம் கொடுக்கப்பட்டது. அங்கு புதிய தேவாலயம் கட்டப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. இச்சபையின் முதல் சபை ஊழியராக கேப்டன் பால் தங்கசாமி அவர்கள் பணி செய்தார்கள் அனைந்த பெருமாள் நாடாரூர் மற்றும் அதைச் சுற்றியுள்ள முருகாண்டியூர், தீர்த்தாரப்பபுரம், சிவநாடானூர், கிராம சபை மக்கள் இந்த தேவாலயத்தில் ஆண்டவரை வழிபட்டு வருகின்றனர்.

**தற்போதைய பாப்பான்குளம் திருச்சபை**

வளர்ந்து வந்த பாப்பான்குளம் திருச்சபையில் சபை மக்கள் அமர்ந்து ஆராதிப்பதற்கு போதுமான இடம் இல்லாத படியினால் திரு. தேவேந்திரன் ஆசிரியர் அவர்கள் சபை ஊழியராக பணி செய்த காலகட்டத்தில் தேவாலயம் முழுவதுமாக அப்புறப்படுத்தப்பட்டு புதிய தேவாலயம் கட்டப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. நூறு ஆண்டுகளாக வடக்கு பாப்பான்குளம் திருச்சபை அம்பாசமுத்திரம் சேகரத்தோடு இணைந்து செயல்பட்டு வந்தது. 2018 இல் வடக்கு பாப்பான்குளம் திருச்சபை கடையம் சேகரத்தோடு இணைக்கப்பட்டுள்ளது.



# அழைப்பிற்கு இணங்கிய
# எலைசா மால்ட்

திருமதி.நிருபா ஜேசுவடியான்

எலைசா மால்ட், நாகர்கோவிலில் முதல் L.M.S. மிஷினெரியாக பணியாற்றி வந்த சார்லஸ் மால்ட் ஐயர் மற்றும் மார்தா மால்ட் அம்மையாருக்கு 1822 ஆம் ஆண்டு மூத்த மகளாக திருவிதாங்கூரில் பிறந்தார். இங்கிலாந்தின் பூர்வீக குடும்பங்களை சேர்ந்த இவரது பெற்றோர், தேவனின் தெளிவான அழைப்பிற்கு இணங்கி, இந்தியாவில் குறிப்பாக நாகர்கோவிலில் கால்பதித்தனர். அச்சமயம் எலைசா பிறந்ததால் மிஷனெரி பயிற்சியுடன் சேர்ந்து தமிழ் மொழி பயிற்சியும் அவர் பெற்றோரிடமிருந்து கிடைக்கப் பெற்றார். நாகர்கோவிலில் தன் தந்தையார் மால்ட் ஐயர் நடத்திய அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்ட தமிழ் நூல்களை பிழைதிருத்தும் பணி செய்து வந்தார்.



எலைசாவின் தாயார் திருமதி. மால்ட் அம்மா அவர்கள் நாகர்கோவிலில் பெண்கள் தங்கியிருந்து உணவருந்திக் கற்கும் பெண்கள் போர்டிங் பள்ளியொன்றை துவங்கினார்கள். அப்பள்ளியே தென்னிந்தியாவில் பெண்களுக்காக துவங்கப்பட்ட முதல் போர்டிங் பள்ளியாகும். மேலும் தையற்கலை கற்பிப்பதற்கு ரேந்ரா தையல் பள்ளியை தொடங்கினார். நாகர்கோவிலில் கிறிஸ்தவப் பெண்களுக்கு வருவாய் தரும் குடிசைத் தொழிலை கற்றுத்தந்த பெருமை மால்ட் அம்மையாரையே சாரும். தாய் செய்த பணிகளைப் பார்த்து வளர்ந்த எலைசாவிற்கு பெண் கல்வியின் முக்கியத்துவம் நன்கு புரிந்தது. ஆகவே பெண்கள் வாழ்வில் மறுமலர்ச்சி அடைய தானும் தன்னால் இயன்ற பணியை செய்ய வேண்டும் என ஆர்வம் கொண்டார்.

### திருமணம்:

அவரது 21 ஆம் வயதில் திருமண ஏற்பாடு ஆரம்பமானது. இடையன்குடியில் பணியாற்றி வந்த 29 வயதான கால்டுவெல் ஐயருக்கும் எலைசா மால்ட் அம்மையாருக்கும் 1844-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 20-ம் தேதி நாகர்கோவிலில் உள்ள கல்கோயில் என்று அழைக்கப்படும் ஹோம் சர்ச்சில் திருமணம் நடந்தது. அத்திருமணத்தை கால்டுவெல் ஐயரின் நெருங்கிய நண்பரான மெஞ்ஞானபுரம் ஜான் தாமஸ் ஐயர் அவர்கள் நடத்தினார்கள். திருமணம் முடிந்த பின் இடையன்குடி மக்கள், புதிய தம்பதியரை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். முதன்முதலாக ஒரு ஐரோப்பிய பெண்ணை ஆச்சரியத்துடன் பார்த்தனர். மணவாழ்வு இன்பமாக ஆரம்பத்தது. இருவரது தரிசனமும் வாஞ்சையும் ஒன்று போல் அமைந்தது. எலைசா அம்மையாருக்கு தமிழ் நன்கு தெரிந்ததால் தன் கணவருக்கு கற்றுக் கொடுத்தார். 'ஏட்டுத்தமிழை' நூல்களின் வாயிலாக கற்றறிந்த கால்டுவெல் ஐயர், வீட்டுத் தமிழை வாழ்க்கைத் துணை எலைசா அம்மையாரிடம் கற்றதாக கூறுகிறார்.

### முதல் போர்டிங் பள்ளி:

அக்காலத்தில் இடையன்குடியில் பெண்கள் கல்வி கற்றல் பெரும் தவறு என கருதினார்கள். பெண்களின் நிலைமையை கண்ட எலைசா அம்மையார் அவர்கள் வாழ்வை முன்னேற்ற வேண்டும் என விரும்பினார். போர்டிங் பள்ளியை உருவாக்க நினைக்கும் பொழுது கடுமையான எதிர்ப்பை சந்தித்தார். எனினும் முழு வேகத்துடன் செயல்பட ஆரம்பித்தார். திருமணமான இரண்டு மாதத்திற்குள்ளாகவே எலைசா அம்மையார் இடையன்குடியில் 1844-ஆம் ஆண்டு மே மாதம் பெண்கள் போர்டிங் பள்ளியை துவங்கினார். எலைசா அம்மையாரின் கணவர் கால்டுவெல் ஐயர் தன் மனைவிக்கு பக்கபலமாக இருந்து செயல்பட்டு வந்தார். ஆரம்பத்தில் 8 பெண்களே சேர்ந்தார்கள். நாளடைவில் இந்த எண்ணிக்கை அதிகமானது. எலைசா அம்மையார் பெண்களுக்குச் செய்யப்பட வேண்டிய வேலைகளை மிகவும் திறம்பட செய்ததினால் கால்டுவெல் ஐயர் தன் சுவிசேஷப் பணியை முன்னிலும் அதிக ஈடுபாட்டுடன் செய்து வந்தார்.

### முதல் பெண் தலைமை ஆசிரியர் :

பெண்கள் ஊழியத்தில் எலைசா அம்மையாருக்கு உதவியாக இடையன்குடியைச் சார்ந்த எலியனார் என்ற 18 வயது இளம் பெண் நியமிக்கப்பட்டார். எலைசா அம்மையார் அவருக்கு அதிக பயிற்சியளித்து அவர் திறம்பட பணியாற்ற உற்சாகப்படுத்தினார். அதின் விளைவாக 1844 - ஆம் ஆண்டு

போர்டிங் பள்ளியின் ஆசிரியையும், மேட்ரனுமாக எலியனார் நியமிக்கப்பட்டார். அவரது பணியை பாராட்டி எலைசா அம்மையார் அவரை தலைமை ஆசிரியராக நியமித்தார். அக்காலத்தில் எலியனார் தான் முதல் இந்திய பெண் தலைமை ஆசிரியர் என்ற பெருமைக்குரியவர் என கால்டுவெல் ஐயர் அவர்கள் எழுதுகிறார்.

**மிஷன் ஊழியம் :**

அப்பள்ளியில் பயின்ற பெண்கள் பெரியவர்களாகும் போது நல்ல கிறிஸ்தவ மனைவிகளாகவும், நல்ல தாய்மார்களாகவும் சிறந்து விளங்கினார்கள். அந்நாட்களில் பெண்களை வீடுகளிலும் வெளியிலும் வேற்று ஆண்கள் சந்தித்துப் பேசுவது என்பது மாபெரும் குற்றமாகக் கருதப்பட்டது. அதனால் சுவிசேஷ ஊழியம் செய்யவும், சபை ஆராதனைகளை நடத்தவும் பெண்களை ஈடுபடுத்த கால்டுவெல் தம்பதியினர் முயன்றார்கள். தாங்களாகவே முன்வந்து ஊழியத்தில் ஈடுபட விரும்பிய பெண்களை சிறுசிறு குழுக்களாக சேர்த்து ஜெபிக்கவும், ஊழியம் செய்யவும், வேதாகம அறிவில் வளரவும் பயிற்சி கொடுத்தார். அக்காலத்தில் உயர்குலப் பெண்கள் பள்ளியில் சேர்ந்து படிக்க இயலாது. ஆகவே அவர்கள் வீடுகளில் வைத்தே கல்வி கற்பிப்பதற்காகவும், கிறிஸ்துவுக்குள் வளருவதற்காகவும் முதலில் இரண்டு பெண்களை நியமனம் செய்தார்கள். உயர்ஜாதி பெண்களுக்கு கல்வி அறிவும், வேத அறிவும் கொடுப்பதற்காக ஆரம்பிக்கப்பட்டது. முதலில் இடையன்குடிக்கு அருகில் உள்ள குட்டம் என்ற கிராமத்தில் மிஷன் ஊழியம் ஆரம்பிக்கப்பட்டது.

**தையல் பள்ளி:**

இடையன்குடி பெண்கள் முன்னேற்றத்தில் அக்கறை கொண்ட எலைசா கால்டுவெல் அம்மையார் பெண்களே சுயமாக தொழில் செய்ய ஒரு தையல் பள்ளியை தொடங்கினார். அவர் தொடங்கிய ரேந்தா தையல் பள்ளியில் முதலில் 60 பெண்கள் சேர்ந்தார்கள். தையலுடன் லேஸ் பின்னவும் கற்றுக் கொடுத்தார்கள். இடையன்குடி நேந்தா தையல் பள்ளியில் பின்னப்படும் லேஸ்கள் வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்யப்பட்டது. லண்டன், கிளாஸ்கோ போன்ற பிரிட்டிஷ் பட்டணங்களில் இடையன்குடி லேசுக்கு அதிக வரவேற்பு இருந்தது. எந்த விலை கொடுத்தும் வாங்கத் தயாராக இருந்தார்கள். இப்பணத்தைக் கொண்டு அம்மையார், தையல் பள்ளி மாணவர்களுக்கு உதவி செய்தார்கள்.

**பிள்ளைகளின் பங்கு:**

கால்டுவெல் - எலைசா தம்பதியினருக்கு தேவன் ஏழு பிள்ளைகளை கொடுத்து ஆசீர்வதித்தார். நான்கு ஆண் பிள்ளைகளும் மூன்று பெண் பிள்ளைகளும் இருந்தார்கள். பெண் பிள்ளைகளில் முதல் பெண் பிள்ளை இசபெல்லா. பிள்ளைகள் ஏழு பேரும் தங்கள் பெற்றோரின் ஊழியத்தில் பெருந்துணையாய் இருந்தார்கள். இசபெல்லா தன் தாய் எலைசா அம்மையார் நடத்திய போர்டிங் பள்ளிக்கு உதவியாக இருந்தார்கள். ஊழியத்தில் இவர்களின் பங்கு மிகவும் முக்கியமானதாக இருந்தது. இடையன்குடியின் நிலைமைகள் கால்டுவெல் ஐயரின் பிள்ளைகள் மனதை அதிகம் பாதித்தது. தூத்துக்குடி, புதுக்கோட்டை போன்ற பகுதிகளில் போர்டிங் பள்ளியை ஆரம்பித்து நடத்தினார்கள்.

போர்டிங் பள்ளியை நடத்த பொருளாதார நிலையில் மிகவும் கஷ்டப்பட்டனர். கால்டுவெல் ஐயரின் பிள்ளைகள் இங்கிலாந்தில் உள்ள தங்கள் நண்பர்களுக்கு நிதி தேவையை குறித்து எழுதினார்கள். இதன் பலனாக ப்வென்றன் என்ற குருவானவர் 100 பவுன்ஸ் (அன்றைய மதிப்பு 1060 ரூபாய்) அனுப்பினார். நன்றியுடன் பெற்றுக்கொண்ட கால்டுவெல் ஐயர் குடும்பம் போர்டிங் பள்ளியை சிறப்பாக நடத்தினார்கள்.

**ப்வென்றன் எஸ்டேட்:**

கால்டுவெல் ஐயர் தம்பதியினர், பெண்கள் போர்டிங் பள்ளிக்கு நிரந்தர வருமானம் வர முயற்சி எடுத்தார்கள். பயிர் செய்யும் விவசாய நிலங்களை வாங்கினார். அந்நிலங்களில் ஒன்றை நீரைச் சேமிக்க குளம் ஒன்றை வெட்டினார். அந்நிலங்களிலிருந்து வரும் வருமானத்தில் ஒரு பகுதியை பயிர் செய்யும் விவசாயிகளுக்கும், மீதி வருமானத்தை பெண்கள் போர்டிங் பள்ளிக்கு மட்டுமே செலவிட்டார். ப்வென்றன் குளம் என்று பணம் அனுப்பிய குருவானவரின் பெயரையே சூட்டினார். அந்நிலங்களுக்கு ப்வென்றன் எஸ்டேட் என்று பெயரிட்டார். அக்குளம் கூடங்குளம் பகுதியில் உள்ளது. இவ்வாறு குடும்பமாக இடையன்குடிக்காக வாழ்ந்தார்கள்.

**எலைசா அம்மையாரின் கடைசி நாட்கள்:**

எலைசா அம்மையார் தன் வாழ்க்கையில் எவ்வளவு உதவியாக இருந்தாரென்பதை கால்டுவெல் ஐயர் இவ்வாறாக கூறுகிறார். "முதலில் மிஷினெரியாகவும், பின்பு அத்தியட்சராகவும், புதைபொருள் ஆராய்ச்சியாளராகவும், திராவிட மொழிநூல் வல்லுநராகவும் நான் ஏதாவது செய்தது உண்டானால், அவையெல்லாம் தேவ வழி நடத்துதலுக்கு உட்பட்டு என் அருமை மனைவி எலைசாவின் தீர்க்காலோசனை, அனுபவம், பொறுமை, சோர்வில்லாத ஆர்வம் முதலியவற்றாலேயே, என்னால் கடைசிவரை ஊழியம் செய்ய முடிந்தது" என்று தன் அன்பு மனைவி எலைசா அம்மையாரை பற்றி எழுதியுள்ளார்.

இடையன்குடிக்காக குடும்பமாக உழைத்த கால்டுவெல் பேராயர் அவர்கள் ஓய்வு பெற்ற போது தன் வயோதிகம் காரணமாக 1891-ஆம் ஆண்டு ஆகஸ்ட் 28-ஆம் நாள் கொடைக்கானலில் கர்த்தருடைய இராஜ்ஜியம் சென்றடைந்தார். அவருடைய விருப்பப்படி சரீரம் இடையன்குடி திரித்துவ தேவாலயத்திற்குள்ளே நற்கருணை பீடத்திற்கு அடியில் நல்லடக்கம் செய்யப்பட்டது. அதன் பின் 8 ஆண்டுகள் கழித்து 1899 ஆம் ஆண்டு ஜூன் மாதம் 18-ஆம் தேதி எலைசா கால்டுவெல் அம்மையார் தனது 77-வது வயதில் மரணமடைந்தார். அவரது உடலும் தன் கணவர் கால்டுவெல் மகானின் அருகிலேயே நற்கருணை பீடத்தின் அருகில் அடக்கம் செய்யப்பட்டது.

இடையன்குடிக்காகவே வாழ்ந்து தன் ஓட்டத்தை முடித்த இத்தம்பதியினரின் பணி மறக்க முடியாது. சரித்திரத்தில் நீங்கா இடத்தை பெற்றுவிட்டது. தேவ இராஜ்ஜியம் இவர்கள் மூலமாக திடமாக அஸ்திபாரம் இடப்பட்டு இன்றும் அழியாது விளங்குகிறது. இன்று நம்முடைய பணி எப்படி உள்ளது? தேவ இராஜ்ஜியத்திற்கு உள்ளவைகளாக உள்ளதா? உலகத்திற்கு உள்ளதாக இருக்கிறதா?

நான் மற்றொருவனுடைய அஸ்திபாரத்தின்மேல் கட்டாதபடிக்கு கிறிஸ்துவினுடைய நாமம் சொல்லப்பட்டிராத இடங்களில் சுவிசேஷத்தை அறிவிக்கும்படி நாடுகிறேன். ரோமர் 15:21

# வரலாற்றுச் செய்தி



தமிழ்நாடு சட்டப்பேரவை தலைவர் பெருமதிப்புக்குரிய மாண்புமிகு திரு மு. அப்பாவு ஐயா அவர்களை திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கம் சார்பாகவும், ஆபிரகாம் பண்டிதர் தமிழ் வளர்ச்சி குழு சார்பாகவும் அவர் பிறந்த ஊரான சாம்பவர்வடகரை சேகர குரு அருள்திரு.ஜெபரத்தினம் அவர்களும் கீழச்சிவந்திபுரம் சேகர தலைவர் அருள்திரு. சாமுவேல் பிரகாஷ் ஐயா அவர்களும் மற்றும் வரலாற்று சங்க உறுப்பினர் கனகசெல்வன் & மன்னா செல்வகுமார் அவர்களும் அண்ணன் பணகுடி திரு.ஜெயக்குமார் அவர்களும் உடன் இருந்தனர்.

ராவ் சாகேப் ஆபிரகாம் பண்டிதர் அவர்கள் ஆசிரியராக, சித்த மருத்துவராக, கவிஞராக, தமிழிசை ஆய்வாளராக தொண்டாற்றி உலகின் நீண்ட இருளைக் கிழித்து வெளிவந்த ஆபிரகாம் பண்டிதர். அவர்களின் நினைவு நாளை அரசு விழாவாகவும், பிறந்த ஊரில் மணி மண்டபம் அமைக்கவும், நினைவு நூலகம் அமைக்கவும் ஆபிரகாம் பண்டிதர் தமிழ் வளர்ச்சி குழு தமிழக அரசிடம் கோரிக்கை வைத்துள்ளது. அதனைத் தொடர்ந்து ஆகஸ்ட் மாதம் முழுவதும் கொண்டாட திட்டமிட்டுள்ளது. குறிப்பிட்டத்தக்கது.

நம்முடைய மாத இதழை ஐயா அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தோம் மற்றும் ஆபிரகாம் பண்டிதர் நூல்களையும் வரலாற்று சங்க நூல்கள் குறிப்பாக கிளாரிந்தா வரலாற்று நூல், முதல் இரத்த சாட்சி சுந்தரானந்தம் நூல் வட திருநெல்வேலி அப்போஸ்தலர் கனம் ராக்லாந்து. ஐயா அவர்களுக்கு நூல்களை வழங்கினோம்.



**விக்டோரியா பால் அம்மா தனது 93வது வயதை முடித்து 94வது ஆண்டை தொடங்கியுள்ளார்கள். கடவுளின் அருளால், நம்முடைய மாத ஆய்விதழை கடந்த மூன்று வருடமாக படித்து வருகின்றர்கள். கடந்த மாத இதழை பார்த்தவுடன் அத்தனை மகிழ்ச்சியில்...**



சாம்பவர்வடகரையில் நடந்த திருமண வைபவத்தில் அண்ணன் மோகன் சி லாசரஸ் அவர்களுடன் நம்முடைய வரலாற்று சுவடுகள் மாத இதழைக் குறித்தும் நாம் வெளியிடும் புத்தகங்களை கொடுத்து விரிவாக எடுத்துரைக்க வாய்ப்பு கிடைத்தது.



சிவகாசியில் கனம். மிஷனெரி தாமஸ் ராக்லாண்ட் 209 பிறந்த தினம் கொண்டாடப்பட்டது.

அத்தியாயம் 13

# புரட்சிப்புயல் ஏமி கார்மைக்கேல்

முனைவர் ஜான்சி பால்ராஜ்,
ஆசிரியர் , திருநெல்வேலி

ஏமியும் அவரது சகாக்களும் தேவதாசிமுறையைப் பற்றின அப்போதைய நிலைமையை தனிநபர்களை சந்தித்து விளக்கிக் கூறி விழிப்பூட்டினர். இதனிடையே பெண்களுக்கு எழுத்தறிவிக்கும் கல்விப் பணியும் செய்தனர்.

கிராமப்புறங்களில் வீட்டுத் திண்ணைகளிலும் மர நிழல்களிலும், எழுதவும் வாசிக்கவும் விரும்பிய பெண்களுக்கு எளிய முறைகளில் எண்ணையும் எழுத்தையும் கற்பித்தனர். ஒருசில பெண்கள் இதில் அதிக ஆர்வம் காட்டினர். ஏமியின் வருகைக்காகவே காத்துக் கிடந்தனர். பெரும்பாலான பெண்கள் தங்கள் ஊர்ப் பெண்கள் கல்விக் கற்பதை வேடிக்கைப் பார்ப்பதற்காகவே கூடினர். இதன்வழியாக அன்றைய பெண்களுக்கிடையே தேவதாசிமுறையைப் பற்றி கூறுவதற்கான வாய்ப்பு அதிகரித்தது.

ஏமி, தான் வந்த வேலையை மறந்து இத்தகைய சமூகப்பணிகளில் முனைப்பானதை மிஷனெரி நிறுவனங்களும் மிஷனெரிகளும் இது இவருக்குத் தேவையற்ற வேலை என்று வசைபாடினர். இந்தப் பணியைப் பற்றி அரைகுறையாக அறிந்த பிற மாநிலங்களில் கிறிஸ்தவ சமயப்பணி செய்துவந்தவர்களுடமிருந்து எதிர்ப்பான கருத்துக்களைத் தாங்கிய கடிதங்களும் வந்து குவிந்தன.

ஆனால், தமிழ்ச் சமூகத்தில் மக்களிடையே பெருமளவில் நல்ல மனமாற்றம் நிலவியது. குறிப்பாக வசதிபடைத்தோர் கோவில்களுக்குத் தங்களது பெண் குழந்தையை தெய்வத்திற்கென்று கொடுக்க வேண்டும் என்ற கட்டாயத்தை தளர்த்திக் கொள்ளத் தொடங்கியிருந்தனர்.

அதற்குப் பதிலாக ஏழ்மையில் தத்தளிக்கும் பகுதிகளில் தேவதாசியர் மூலமோ அல்லது அதற்கென செயல்பட்ட தரகர்கள் மூலமாகவோ பணம் கொடுத்து பெண் குழந்தைகளை வாங்கி தங்களது கடனைத் தீர்த்து திருப்திப்பட்டுக்கொண்டனர். இந்நிலை தமிழகம் முழுவதும் பரவலாக இருந்து வந்தது.

முதன்முதலாக இவ்வாறு பண்ணையார் ஒருவனால் பேரம் பேசப்பட்ட குழந்தை ஒன்றை அவ்வூர் தேவாலய உபதேசியார் ஜெபராஜ் என்பவர் அதற்கான தொகையை தான் பெற்றுத் தருவதாகக் கூறி, அக்குழந்தையை இரவோடு இரவாக ஏமியிடம் கொண்டுவந்து ஒப்படைத்தார்.

ஏமி அந்தக் குழந்தையை உச்சி முகர்ந்து முத்தமிட்டு, ஓடி வந்த ப்ரீனாவிடம் நீட்டினார். தன் தாயின் மற்றொரு குழந்தையை முதன் முதல் பார்ப்பதை போல வியப்பும் மகிழ்ச்சியும் நிறைந்து முகம் முழுவதும் முத்தமிட்டாள், அவள். பிறந்து பதிமூன்று நாட்கள் தான் ஆகிறது அம்மா. பிறக்கப் போகும் குழந்தை பெண் குழந்தை என்றால் எனக்கு தந்துவிடு என்று பெரும் தொகை ஒன்றை தருவதாக வாக்கு கொடுத்த பண்ணையாரான ஒருவனின் கைக்கு இக்குழந்தையை செல்ல இருந்தது. அதை நான் கேள்விப்பட்டதிலிருந்து அந்த வீட்டிற்குச் சென்று இதன் தாயோடு உண்மையை எடுத்து பலமுறை பேசினேன். ஒரு மாதத்தில் அவள் மனம் மாறினாள். தேவதாசியாக தனது மகள் வாழ அவள் விரும்பவில்லை.

அவளிடம் உங்களைப் பற்றியும் ப்ரீனாவைப் பற்றியும் எடுத்து சொன்னேன். நான் வாரம்தோறும் நமது ஞாயிற்றுக் கிழமை ஆராதனையில் இதைப்பற்றின விழிப்புணர்வை எந்த வகையிலாவது ஏற்படுத்திக் கொண்டே இருக்கிறேன். நமது ஆலயத்திற்கு தொடர்ந்து வரும் தேவமேரி என்ற பெண்தான் எனக்கு இந்தக் குழந்தையைப் பற்றின தகவலை தந்தாள். இப்போதும், அந்தத் தாய் உங்களிடம் ஒப்படைக்க சொல்லி தேவமாரியிடம் தான் இன்று குழந்தையை கொடுத்தனுப்பினாள் என்றார் ஜெபராஜ்.

இன்னும் தீவிரமாக நாம் செயல்பட்டாக வேண்டிய கட்டாயத்தில் இருக்கிறோம். வரும் ஞாயிற்றுக் கிழமை டோனாவூர் ஆலய வளாகத்தில் உவாக்கர் ஐயா தலைமையில் இதைப் பற்றின ஆலோசனைக் கூட்டம் நடத்துவார்.

சபை பொருப்பாளர்கள் ஒவ்வொருவரும் தங்கள் மனைவியோடு இந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டும். பெண்கள் தான் பெண்களோடு தெளிவான கருத்துக்களைக் கொண்டு சேர்க்க முடியும் என்றார் ஏமி.

குழந்தையை ஒவ்வொருவராக எடுத்து முத்தமிட்டு கொஞ்சி மகிழ்ந்தனர். குழந்தையின் சிவந்த கன்னத்தை விரல்களால் தொட்டுத்தொட்டு தன் உதட்டில் ஒத்திக்கொண்டாள்....ப்ரீனா. தன்னைப் போல அழிந்து போக இருந்த ஒரு மொட்டு இன்று மலர தொடங்கியதை எண்ணி குதூகலித்தாள்.

இப்போது ப்ரீனா குழந்தைக்கு அவளுக்குப்பிடித்த பெயரொன்றை வைக்கப்போகிறாள்.. என்று ஏமி கூற, ப்ரீனா... ஆ...என்றாள் உற்சாகத்தில்.

**ம்...என்ன பேர் வைப்பது....!!?**

**யோசித்துக்கொண்டே நின்றிருந்தாள்.சில**

**வினாடிகளில், ம்...கண்டுபிடிச்சிட்டேன்..ஆங்...**

**சுகந்தி...நல்லாயிருக்கா...?**

**என்றவள் ஏமியை பார்த்தாள்.**

**ஏமி அந்தப் பெயரை உச்சரித்துப் பாரத்தார்.**

சு க தி...அது வந்து சுகாத்தி என்று அவர் கூற.. எல்லோருக்கும் ஒரே சிரிப்பு. இல்லம்மா, சுகந்தி என்றாள் பொன்னம்மாளின் மகள் பரிபூரணம். சரி..சுக்கந்தி என்று ×க்× சேர்த்து ஓரளவு சரியாக சொல்ல.. ஆமா,சுகந்தி,சுகந்தி என்று கூறியபடி மகிழ்ச்சியால் குதித்தனர் சிறுமிகள்.

உவாக்கர் ஐயாவும் மனைவியும் குன்னூரில் நடந்த சமயவழிபாட்டு பிரசங்ககூட்டம் ஒன்றிற்கு சென்று ஐந்து நாட்கள் ஆகியிருந்தது. இன்னும் ஒரு வாரத்தில் வந்து விடுவார்கள். அவர்கள் வந்ததும் ஞாயிற்றுக் கிழமை நடக்கவிருக்கும் உபதேசிமார்களின் கூடுகையைப் பற்றின தகவலை நீங்கள் தான் அனைத்து சபைகளுக்கும் தெரிவித்தாக வேண்டும். நாங்கள் டோனாவூரை சுற்றின பகுதிகளில் தெரிவித்து விடுகிறோம். நமது சபையை சாராத மற்ற சமயங்களில் இருப்போர் நமது கருத்திற்கு உடன்படுவார்களென்றால் அவர்களையும் அழைத்துவரலாம். அது ஆணாக இருந்தாலும் சரி பெண்ணாக இருந்தாலும் சரி என்றார், ஏமி.

நிச்சயமாக செய்கிறேன் அம்மா என்றார். ஜெபராஜ். தாயைப் பிரிந்த பச்சிளம் குழந்தைக்கு அனைவரும் தாயாகி அன்பை பொழிந்தனர். இந்தச் செய்தி சுற்றுவட்டாரமெங்கும் பரவி சலசலப்பை ஏற்படுத்தியது.

தேவதாசி முறையை விரும்பும் பிரிவினரிடையே எதிர்ப்புகள் மறைமுகமாக புகைந்து கொண்டிருந்தது. ஆனால் எதையும் சந்திக்கும் உறுதியோடு தனது அமைதிப் போரை அறிவுப் பூர்வமாக நடத்தினார் ஏமி.

இதற்கிடையே இந்தியச் சமூக சீர்திருத்தத்தின் மீது அதிக அக்கரையுடையவரும் இந்திய தேசிய காங்கிரஸ் தலைவருமாக இருந்த திரு.தாதாபாய் நௌரோஜ், 1912 ஆம் ஆண்டு, பெண்கள் மற்றும் சிறுமிகள் பாதுகாப்பு மசோதாவை அறிமுகம் செய்திருந்தார்.

இதன்மூலம் 1913 ஆம் ஆண்டு ரிஜினால்ட் கிராட்டோக் இந்திய குற்றவியல் சட்டம் மற்றும் சட்டத் திருத்த மசோதாவை அரசு சாரபில் கொண்டு வந்திருந்தார். இதன்படி பதினொரு வயதிற்கு கீழே உள்ள பெண்களைக் கோயிலுக்கு அர்ப்பணிக்கத் தடை விதித்தது. இது ஏமிக்கு மட்டுமல்ல கோவில் நிர்வாகத்தினருக்கும் தெள்ளத் தெளிவாகத் தெரிந்திருந்தது.

பொதுமக்களுக்கு இதைப்பற்றின புரிதலை ஏமியின் குழுவினர் எடுத்துக் கூறி அவர்களது தேவையற்ற பயத்தைப் போக்கி குழந்தைகளை மீட்டனர். இதனால் கோவில் நிர்வாகம் வெளிப்படையாக ஏமிக்கு எதிர்ப்புத் தெரிவிக்க முடியாமல் தடுமாறியது. ஆனாலும் தமிழ்நாட்டில், அன்றைய முக்கிய பத்திரிக்கைகள் சரியான புரிதலின்றி ஏமியின் இச்செயல்பாடுகளைக் கண்டணம் செய்து எழுத தவறவில்லை. இருப்பினும் கண் துடைப்பிற்காக அவ்வப்போது ஏற்படுத்தப்பட்ட இத்தகைய சட்டங்கள் ஏமியின் பணிகளுக்கு கைக்கொடுத்ததை மறுக்க முடியாது. இந்தக் குழந்தையைத் தொடர்ந்து மற்றொரு குழந்தையும் பிறந்து இரண்டு மாதங்களில் ஏமியிடம் கொண்டுவரப்பட்டது. இந்தமுறை கொண்டு வந்தவர் கிறித்தவ சமயத்தைச் சாராத ஒரு நபர். அவர் தனது பெயரையோ ஊரையோ சொல்ல விரும்பாமல் மௌனம் காத்தார். இது தனது உறவினர் ஒருவர் வீட்டில் தேவதாசிக்கு கொடுக்கும்படி வளர்ந்துவரும் குழந்தை என்றும் பிறந்து முழுசா மூன்று மாதம் முடியவும் கோவிலுக்கு கொடுத்து விடுவதென்ற பொருத்தனையோடு இருந்ததாகவும் கூறினார்.

இதில் எனக்கு கொஞ்சமும் விருப்பமில்லம்மா, இந்தக் குழந்தை தேவதாசியானால் அதன் நிலமை என்னவாகும் என்பதை நான் உங்கள் மூலம் அறிந்தவன். எனவே இதைப்பற்றி எனது உறவினரிடம் எடுத்துக் கூறி, உங்களது காப்பகத்தைப் பற்றியும் கூறினேன். மெல்ல மெல்ல அவர்களும் உண்மையை உணர்ந்து எனது கருத்திற்கு உடன்பட்டனர்.

இப்போது குழந்தையின் பெற்றோருடைய முழு சம்மதத்தோடு உங்களிடம் கொண்டு வந்திருக்கிறேன். குழந்தை உயிரோடு இருந்தால் எப்போது வேண்டுமானாலும் நாங்கள் இங்கு வந்து பார்த்துக்கொள்கிறோம் அம்மா. எங்கள் குழந்தையை அந்த அசிங்கமான வேலைக்கு கொடுப்பதை நாங்கள் விரும்பல என்று கண்ணீர் மல்க கூறிவிட்டு விடை பெற்றார் அந்தப் பெரியவர்.

நமது பணிகளுக்குக் கிடைத்த அடுத்த பெரிய வெற்றியிது. சமூகம் விழிக்கத் தொடங்கியிருக்கிறது. இனி தொடர் வெற்றிதான் நமக்கு என்றார் ஏமி. இந்தக் குழந்தைக்கு பரிபூரணம் தான் பேர்சூட்ட வேண்டும் என்ற ஏமி, அவள் மடியில் குழந்தையை வைத்தார். அவள் ஒருநாள் முழுவதும் யோசித்து, ஆலோசித்து இறுதியாக இந்திர நீலா என்று பெயர் வைத்தாள். ஏமிக்கு குழந்தைகளின் பெயர்கள் எல்லாம் தமிழர்கள் வைக்கும் பெயராக இருக்கவேண்டும் என்ற பேராவல். அடுத்தக்கட்ட நடவடிக்கையாக தேவதாசிக் குழந்தைகள் பயன்படுத்தப்பட்ட கோவில்களுக்கே சென்று அங்கு ப்ரீனாவைப் போன்று வெளியேற துடிக்கும் குழந்தைகளை அழைத்து வர வேண்டும் என்று திட்டம் வகுத்தார். இது எரியும் செஞ்சூரியனை பஞ்சு விரலால் தொட முயற்சிப்பது போன்றது என்பதை ஏமி அறியாமல் இல்லை. ஆனாலும் இரவுப்பகலாக அவருக்குள் கொழுந்து விட்டு எரிந்து தூண்டிக் கொண்டேயிருந்த எண்ணற்றக் குழந்தைகளின் அழுகுரலின் சத்தம் அவரைத் தூங்கவிடாமல் துரத்தியது. உடனிருந்தவர்களையும் அத்தீ பற்றிக் கொண்டது. அதன் ஒளி அதுவரை மங்கியெரிந்து கொண்டிருந்த மக்களின் அகத்தீயையும் மெல்ல மெல்ல எரிய வைத்துக் கொண்டிருந்தது.

சமயச்சாயத்தில் சிக்கிக்கிடந்த இச்சமூகத்தின் பெரும்புள்ளிகளின் ஆதரவோடு செயல்பட்டுக் கொண்டிருந்த மிகப் பெரிய மரபார்ந்த விசயத்தின் ஆணிவேரை பிடுங்கும் செயல் இலேசானதா என்ன!? அதுவும் வேற்று நாட்டையும்

மாற்று சமயத்தையும் சார்ந்த ஒரு பெண் நமது நாட்டு சமய நம்பிக்கையை அசைத்திக் காட்டுவதை பார்த்துக் கொண்டிருப்பதா? என்று பொங்கி எழுந்தவர்களின் சீற்றங்களை ஏமி கண்டு கொள்ளவில்லை.

டோனாவூரில் குடியமர்ந்து ஒருசில ஆண்டுகளில் சுமார் ஆறு கோயில்களிலிருந்து 17 குழந்தைகளை மீட்டுக் கொண்டு வந்திருந்தார் ஏமி. கோவில்களில் எப்படி குழந்தைகள் காணாமல் போகின்றது... என்று தெரிந்தும் வெளியில் வெளிப்படையாக இச்செய்தியைக் கூறினால் பெரும் அமளியும் கோவில் நிரவாகத்திற்கு எதிரான எதிர்ப்பும் அதிகரிக்கும். குழந்தைகள் கோவில்களுக்கு வருவதும் தடைபடும். எனவே கோவில்களுக்க்கிடையேயும் சில ஆதரவான அரசியல் தலைவர்களுக்கும் மட்டுமே இச்செய்தி இரகசியமாக கடத்தப்பட்டது.

ஏமி குழந்தைகளைத் திருடிச்செல்லும், பிள்ளைப் பிடிக்கும் மிசி என்று வர்ணிக்கப்பட்டார். உடனிருந்து ஏமியை செயல்படுத்துவதாக உவாக்கர் நேரடியாக காவல் துரையினரால் மிரட்டப்பட்டார். ஆனாலும் கோயில் நிர்வாகம், நேரடியாக இந்தக் குழந்தை காணவில்லை என்றோ இந்த நபரால் திருடப்பட்டது என்றோ வழக்குப் போட இயலாத நிலையிலிருந்தது. ஆறு, ஏழுவயது குழந்தைகளைத் தாலி கட்டி கோவில் வளாகத்தின்குள் போட்டுஅடைத்துவைத்திருப்பதைஎப்படிபகீரங்கமாகஅவர்களால் ஒத்துக் கொள்ள முடியும்?! குழந்தைகள் தாங்களாகவே உடன்பட்டுதான் தன்னோடு வந்ததாக ஏமியிடமிருந்து வந்த பதிலில் உண்மையிருக்கும் பட்சத்தில் நம்மால் ஒன்றும் செய்ய முடியாது என்றனர் கோவிலின் சட்டத்திட்டங்களைப் பாதுகாக்கும் நீதியரசர்கள்.

சிலர், இவள் எப்படி கோவிலுக்குள் நுழைந்து குழந்தைகளோடு பேசுகிறாள்,? எப்படி அழைத்துச் செல்கிறாள், என்று தெரியாமல்புலம்பினர். குறிப்பாக தேவதாசியரால் தத்தெடுக்கப்பட்டு வளர்க்கப்படும் கைக்குழந்தைகள் தான் ஏமியின் முதன்மையான இலக்காக இருந்திருக்கிறது. ஒருமுறை ஒரு கோவிலில் தேவதாசிமுறையைப் பற்றின செய்திகளைச் சேகரித்து அதை வெளிநாடுகளுக்கு எழுத்து மூலம் தெரிவிக்கும் ஆய்வாளராகத் தன்னைக் காட்டிக் கொண்டு, அங்கிருந்த தேவதாசியரோடு பேசிக்கொண்டிருந்தார். உதவியாளர்களாகவும் ஏமிக்கு தமிழ்கற்பிக்கும் ஆசான்களாகவும் அவருடன் சென்றிருக்கும் அவரது தோழியர்கள் அறிமுகம் செய்யப்பட்டனர். சேலைக்கட்டி ஒய்யாரமாக வந்திருக்கும் வெள்ளைக்காரப் பெண்ணின் தமிழ் பேச்சையும் தோற்றத்தையும் வேடிக்கைப் பார்க்க ஏமியை சுற்றி அக்கோவிலின் மூத்த தேவதாசியர் கூடி வந்தனர். ஏமி, தான் வந்த நோக்கத்தை அவர்களுக்கு கூறினார். சில நிமிடங்களில் ஆங்காங்கே இருந்த தேவதாசியர் அனைவருக்கும் செய்தி எட்டியது. ஓரிருவரைத் தவிர எல்லோரும் வந்து ஏமியை சூழ்ந்து கொண்டனர். வாருங்கள், அதோ அந்தப் புல் தரைக்கு சென்று உட்கார்ந்து பேசுவோம் என்றாள் அதிலிருந்த ஒருத்தி. அவள் காட்டிய அந்த இடம் கோவிலின் ஒரு மூலையில் சற்று உயரமான பகுதி. அந்த இடம் பூஞ்செடிகள் நிறைந்த பச்சைப் புல் தரையாக இருந்தது. மிகவும் அழகா இருக்கிறது இந்தக் கோவில் என்ற ஏமி பார்வையை நான்கு பக்கமும் படர விட்டபடியே அவரகளோடு நடந்து கொண்டிருந்தார்.

இந்த இடம் எப்பவும் குளிர்ச்சியாக இருக்கும். இந்தச் செடிகள்தான் பெருமாளுக்கு பூக்களை அள்ளி அள்ளி தந்து கொண்டே இருக்கின்றன என்றாள் இன்னொருத்தி.

ஓ....அப்படியா, மணம் மிகுந்த பூக்கள் என்றார். அனைவரும் புல் தரையில் அமர்ந்தனர். நான் இந்தக் கோவிலின் அருமை பெருமைகளை தெரிந்தாக வேண்டும் என்றார் வியப்போடு. நாங்கள் உங்களுக்கு உதவுகிறோம், உங்கள் தமிழ் பேச்சு நல்லாயிருக்கு என்ற ஒரு பெண் லேசாக சிரித்தபடி ஏமியின் அருகில் அமர்ந்து அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள். நிலவை சுற்றி கண் சிமிட்டும் நட்சத்திரக் கூட்டமாய் தெரிந்தது... அந்த இடம்.

தனது ஆய்வுக் கேள்விகளைக் கேட்கத் தொடங்கினார் ஏமி. கடமை கண் போன்றதாயிற்றே! தனது கையில் அழகிய நாள்குறிப்பேடு ஒன்றை வைத்திருந்தார். பதிலளிப்பவர்களின் பெயர்களோடு கோவில் பற்றின முழுத்தகவல்களையும், நேரம் உட்பட அனைத்தையும் எழுத்தில் பதிவு செய்துக் கொண்டார். ஏமி. எந்தக் கோயிலுக்குச் சென்றாலும் சில நிமிடங்களில் அங்குள்ளோர்களை தனது அன்பால் தன்வசப்படுத்தி அவர்களோடு நட்பு பாராட்டுவதில் அவருக்கு நிகர் அவரே தான்.

முதல் கேள்வியாக, சின்னஞ்சிறு குழந்தைகளை எப்படி இங்கு வைத்துப் பராமரிக்கிறீர்கள்? என்றார்.

அடிக்கடி சுகவீனமாகிவிடும் குழந்தைகளை எப்படி சமாளிக்கின்றீர்கள்? இது அதன் துணைக்கேள்வி. இதற்கு, குழந்தைகளுக்கான அன்றைய கைமருந்துகள் பற்றின அரிய குறிப்புகள் அவர்களிடமிருந்து கிடைத்தன. அவற்றைக் குறித்துக் கொண்டதோடு எளிதில் கிடைக்காதென்ற பொருட்களை அவர்களிடமிருந்து உரிய விலைக்கும் அதிகமான தொகையைக் கொடுத்து பெற்றுக் கொண்டதில் தேவதாசியர்களுக்கு ஏக மகிழ்ச்சி. ஒன்றுக்கு மூன்றாக பெற்றுக் கொண்டு ஏமியை ஏமாற்றிவிட்ட மகிழ்ச்சிவேறு அவர்களுக்கு ஏமிக்கும் தான். பணம் ஒன்றையே நோக்கமாக வைத்து, பெண்ணினத்தைப் பெண்களே சீரழிக்கும் வினோதம் பெரும் வியப்பை தந்து கொண்டே இருந்தது ஏமிக்கு.

அடுத்தக் கேள்வி, உங்களது குழந்தைகள்தானே உங்களுக்கு வாரிசாக முடியும், பிறகு எப்படி மற்றவர்களது குழந்தைகளை உங்களது குழந்தைகள் என்று கூறி கொள்கிறீர்கள்?

நாங்க எத்தனை குழந்தைகளைதான் பெத்துக்கதுங்க? அப்படி பெத்தாலும் எல்லாம் பொம்பளை புள்ளைங்களா இருக்குமா என்ன, நாங்க எல்லோருமே பருவகாலம் முடியபோகிற வயதிலதான் புள்ளைப் பெத்துக்க தொடங்குவோம்.

அப்படியா ? அது என்ன காரணம் ? என்றார் ஏமி வியப்போடு.

இது புரியாதுங்களா உங்களுக்கு? புள்ளை பெத்துக்கிட்டா அழகு பறி போயிடும். அது போய்ட்டா எல்லாம் போயிறும் எங்களுக்கு!! என்று சுற்றியிருந்தவர்களைப் பார்த்து லேசாக உதட்டைப் பிதுக்கி ஒற்றைக் கண்ணை சிமிட்டி அவள் சிரிக்க. கிட்டத்தட்ட எல்லோருமே கொல்லென்று சிரித்தனர். அடுத்தும்

அதே கேள்வியை ஆழமாக கேட்டு விட கூடாதென்ற நோக்கத்தில் சிரிப்பொலி அடுத்தடுத்து தொடர்ந்து அமைதியடைய கூடுதல் வினாடிகளை வாங்கி கொண்டது.

ஏமி இதைப் புரிந்து கொள்ள முடியாத வெகுளி போல குழந்தைத்தனமாக எல்லோரையும் ஒருமுறை பார்த்துவிட்டு அவர்களது விருப்பத்திற்காக அந்தக் கேள்விக்கு முற்றுப்புள்ளி வைத்துக் கொண்டார்.

விபரமில்லாதவர் வெள்ளைக்காரப் பெண் என்ற முத்திரையை அப்பெண்கள் பார்வையால் குத்தித்தள்ளினர். அன்பு புன்னகையோடு அதையும் ஏற்றுக் கொண்டார்,ஏமி.

சின்னஞ்சிறு பெண் பிள்ளைகள் பெற்றோரைப் பிரிந்து எப்படி இருக்கிறார்கள்? என்றார் மெல்ல!

பிறந்ததும் எங்களிடம் வரும் குழந்தைகளைப் பற்றி பிரச்சனையில்லை. அவர்கள் பொட்டுக் கட்டப்படும் வரை எங்களைதான் தாயாக நினைத்து வளருவார்கள். பொட்டுக் கட்டப்படுவதற்கு முன்புதான் உண்மையை பெரும்பாலும் சொல்லுவோம்.

ஆனா…இப்போதெல்லாம் இந்த பிள்ளைங்க நல்லா பேசிப் பழகும் பருவத்திலேயே தெரிஞ்சுக்குதுங்க. எல்லா குழந்தைகளும் ஒண்ணா வளருதுங்களே..ஒன்னுக் கொண்ணு ஏதாவது சூழ்நிலைகளில் சொல்லிருவாங்க. அது ஒன்னும் பெரிய பிரச்சனைகளை தராது.சமாளித்துவிடுவோம். ஆனா வீட்டிலிருந்து பொட்டுக்கட்டி கூட்டிட்டு வரும் பிள்ளைகள்தான் கொஞ்சநாட்கள் எங்களோட ஒத்துப்போகாம வேதனை படுத்துங்க. என்ன செய்றது… போகப் போக கோயில்தான் நமக்கு எல்லாமுன்னு புரிய வைப்போம்.

இந்தக் கோயிலில் இப்போது எத்தனை தேவதாசியர் இருக்கிறீங்க?

ம்….இராஜம்மாள், மொத்தம் எத்தனைபேர் இருப்போமுன்னு சொல்லேன் நீ..என்றாள் முந்தின கேள்விக்கு பதிலளித்துக் கொண்டிருந்தவள். அந்த இராஜம்மாள் அங்கு இருந்த ஏழெட்டுபேர்களில் மிகவும் அழகாகவும் இளையவளாகவும் தெரிந்தது. அவள் முகத்தில் ஒரு இனிய சாந்தம் தெரிந்தது. அதுவரை அவள் காலில் கட்டி ஆடும் ஒரு சிலம்பில் அருந்துபோன ஒரு மணியை இணைத்து கோர்ப்பதில் கவனம் செலுத்திக்கொண்டிருந்தாள். இவள் கூப்பிட்டதும் தலையை உயர்த்தி ஏமியைப் பார்த்து லேசாக புன்னகத்தபடி…

ம்..இப்போதைக்கு பொட்டுக்கட்டியவர்கள் இருபத்தெட்டுபேர் என்றாள்.

அந்த அழகான பெண்ணுக்கு இருபது வயதிற்குள் தான் இருக்கும். ஏமிக்கு ஏதோ ஒன்று இவளிடம் பேசவேண்டும் என்று மனம் தூண்டியது. நீ எப்படி, குழந்தையிலேயே இங்கு வந்து விட்டாயா? என்றார் ஏமி. இல்லை… தாலி கட்டிதான் கூட்டி வந்தாக. என்றாள் அவள். அந்தப் பதிலில் எந்த உணர்ச்சியையும் தெரிந்து கொள்ள முடியவில்லை.

ஓ…சரி. அதற்குப் பிறகு உங்க வீட்டில் உள்ளவங்க இங்க யாரும் வரவில்லையா?

வந்திருக்காங்க, என்ற ஒற்றை பதிலோடு மீண்டும் அந்தக் கால் சலங்கையை சரிசெய்ய குனிந்து கொண்டாள்.

இங்கு வந்த பிறகு எந்தப் பிள்ளையாவது மீண்டும் தங்கள் வீட்டிற்கு சென்றுவிட விரும்பி உங்களை வற்புறுத்தியிருக்கிறார்களா?

ம்..ஆமா, ஆமா அதெல்லாம் நடக்கதான் செய்யும். என்றாள் ஒரு வயதான தேவதாசி .

ராஜம்மாள் எதையோ நினைத்து மெல்லிய பெருமூச்சை வெளியிட்டதை அவள் மார்புக்கூடுகள் விரிந்து சுருங்கியதிலிருந்து ஏமியின் கண்கள்படம் பிடித்தன.

இங்கு எல்லோருமே மிகவும் அழகானவர்களாக இருக்கின்றீர்கள் என்று ஏமி கூற, எல்லோர் முகத்திலும் ஒரே நேரத்தில் புன்னகைத் தொற்றிக்கொண்டு இன்னும் அவர்களை அழகாக்கியது. இராஜம்மாள் மட்டும் சிரித்துக் கொள்ளாமலே அந்த அழகை பெற்றிருந்தாள்.

சரி…நீங்கள் விருப்பம் தெரிவித்தால் உங்கள் அனைவரையும் சேர்த்து ஒரு படம் பிடிக்க விரும்புகிறேன் என்றதும் பொன்னம்மாள் பையிலிருந்த அந்த கருப்புநிற கேமராவை கவனமாக வெளியில் எடுத்து ஏமியிடம் நீட்டினாள்.

புகைப்படக் கருவியைப் பார்த்ததும் முதல்முறை புகைப்படமாக்கப்பட போகும் மகிழ்ச்சியில் ஒருவருக்கொருவர் மகிழ்ச்சிப் பொங்க சிரித்து சிரித்து பேசி தங்களுக்குள் கலகலப்பாகினர். போய் வேற சேலை கட்டிட்டு அலங்காரம் பண்ணிட்டு வாரோம் என்றாள் ஒருத்தி.

ம்….இன்னும் அழகாகத் தெரிவீர்களே என்றார் சிரித்தபடி. ஆமாம்… பிடிக்கதே பிடிக்கீங்க இரண்டு படம் எடுங்க எங்களுக்கும் ஒன்றை தந்துட்டு போங்க நாங்களும் சுவத்தில் மாட்டிப் போடுவோம், பார்த்துக்குவோம் என்றாள் அனைவரின் சார்பாக ஒருத்தி.

சரி, நிச்சயம் தருகிறேன். அடுத்தமுறை வரும்போது சுவற்றில் மாட்டும் அளவில் தயார் செய்து கொண்டு வருகிறேன். நீங்க போய்ட்டு சீக்கிரம் வாங்க…. என்றார் ஏமி.

அனைவரும் எழுந்து ஒப்பனை செய்துவர தங்கள் அறைகளுக்கு சென்றனர்.

இராஜம்மாள் மட்டும் அந்தச் சலங்கையோடு போராடிக் கொண்டிருந்தாள். ராஜம்மா…நீ போகலையா?

இல்ல.. இல்ல நான் குழிச்சிட்டு துணி மாத்திட்டு இப்ப தான் வந்தேன். எனக்கு இது போதும். நான் இங்கயே இருக்கேன் என்றவள் சரியாக்கிவிட்ட சலங்கையை தனது காலில் வைத்து கட்டிப் பார்த்தாள்.

ஏமி எழுந்து அவள் அருகில் வந்து அமர்ந்தார். ராஜம்மாள் ஏமியை நிமிர்ந்து பார்த்து… என்னம்மா என்றாள். உனக்குள் ஏதோ ஒரு சோகம் இருப்பதை உணர்கிறேன் என்றார்.

அவள் கண்கள் சட்டென்று தண்ணீரில் மிதந்தன. வெளியேறி விடாமலிருக்க இமைகளை படபடவென அடித்து விழுங்கினாள். அதெல்லாம் ஒன்றுமில்லை…என்று புன்னகையோடு மீண்டும் தன் கால்களையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

இராஜம்மாள்…. நீ எங்களோடு வருகிறாயா? என்றார் வெடுக்கென்று .

சில வினாடி அமைதிக்குப் பின்னர் அவள், வரவே

முடியாது.. என்றாள். இங்கிருந்து இரண்டுமுறை வெளியே ஓடிப் போயிருக்கேன். தேடிப்பிடித்து இழுத்து வந்துட்டாங்க. இங்க பாருங்க என்று சேலையை முட்டுவரை தூக்கி காட்டினாள்.... மஞ்சள் நிறத்தில் மினுமினுத்த அந்த கால்களில் இரண்டு விரல் அகலத்தில் தீப்பட்ட தழும்புகள். அடுத்தக் காலில் உள்ளங்காலில் ஒரு தழும்பு.

ஏமிக்கு ப்ரீனாவின் தழும்புகள் கண்முன் வந்து போனது. வேதனைத் தாழாமல் அவளைப் பார்த்தவர் நெற்றியில் விழுந்திருந்த அவளது முடிக்கற்றையை சரியாக ஒதுக்கி அந்த அழகான முகத்தை மீண்டும் இரசித்துப் பார்த்தார் ஏமி. அந்த தீண்டுதலிலும் ஸ்பரிசத்திலும் இராஜம்மாள் தன் தாயை உணர்ந்தாள்.

அது சரிமா, ஏன் வெளியே சென்றாய். இங்கு என்ன குறைச்சல்? கோவிலுக்கு என்று தானே உன்னை வீட்டிலேயே வளர்த்திருப்பார்கள்? பிறகு ஏன் வீட்டிற்கு செல்ல நினைத்தாய்?

முதல் முறை என்னை கடவுளுக்கு மனைவியாக்கும் முயற்சியில் ஒருவனோடு இரவில் தங்க சொன்னார்கள். சரி என்றேன். அவன் என்னை கொடுமைப் படுத்தினான். நான் அவன் சொன்னதை போல நடந்து கொள்ளவில்லை.

வேற என்ன செய்தான்? தெரிந்து தானே நீ சம்மதித்தாய்...என்றார் ஏமி.

அவள் லேசாக தலையை ஆட்டிவிட்டு,... அவன் கையில் வைத்திருந்த சிறு கத்தியால் என் உடலை அருத்து பிறகு உறவு கொண்டான். என்று பிறப்புருப்பை தொட்டுக் காட்டினாள். என் அழுகையை அவன் கண்டு கொள்ளவில்லை. இரத்தம் சிந்த சிந்த கொடுமை படுத்தினான்... நான் மயங்கி விட்டேன். என்னை தண்ணீர் தெளித்து எழுப்பி வைத்தார்கள். அவன் போகும்போது, நாளை வருகிறேன் என்று கூறிவிட்டு சென்ற வார்த்தை என்னை துடிதுடிக்க வைத்தது. அடுத்தநாள் சாயந்தரம் வரை படுத்திருந்தேன். எங்காவது சென்று செத்துவிட வேண்டும் என்று ஓடிவிட்டேன். ஆனால் அதிக தூரம் என்னால் ஓட முடியவில்லை. கொஞ்ச நேரத்தில் சோர்வாகி விட்டேன். பிறகு மீண்டும் கோயிலுக்கே வந்து இந்த கோயில் சுவருக்கு வெளியில், அதோ அந்த இடத்திற்கு வெளியில் தான் பதுங்கி இருந்தேன். எல்லோரும் என்னை கோயிலைத் தவிர மற்ற இடங்களில் எல்லாம் தேடியிருக்கிறார்கள். நான் காலையில் அதே இடத்தில் உறங்கி கொண்டிருக்கையில் வந்து எழுப்பினார்கள். உள்ளே கூட்டி வந்து இப்படி காலில் சூடு வைத்தார்கள்.

கண்களில் நீர் துளித்தன, ஏமிக்கு.

நீ என்னோடு வருகிறாயா..? ஏமியின் குரல் ராஜம்மாளுக்கு அதிர்ச்சியாக இருந்தது. நானா... இனியா..? வேண்டாம்...இ ல்லை.. நான் வரவில்லை...என்றாள் யாரும் வருகிறார்களா என்று திரும்பி பார்த்தபடி.

இனியா? என்ற அந்த வார்த்தையில் அவள் பெரிய சோகத்தை அடக்கி வைத்திருந்தாள். பிறகு சொன்னாள், ஆனால் இங்கு வளர்ந்து கொண்டிருக்கும் ஒரு சிறு பிள்ளை ஐந்து வயது தான் ஆகிறது. அவள் அடிக்கடி வியாதிப்படுகிறாள். அதிகமாக என் பராமரிப்பில்தான் இருப்பாள். அவளுக்கு பொட்டுக் கட்ட இன்னும் சில ஆண்டுகள் ஆகும். இங்கிருந்து எப்படியாவது அவளை கொண்டு செல்ல முடியுமா? என்றாள். அதற்கு நான் உங்களுக்கு உதவுகிறேன் என்றவள் மீண்டும் திரும்பி பார்த்துக் கொண்டாள் வேறு யாராவது தன் குரலை கேட்டிருப்பார்களோ என்ற பயத்தில்.

ஏமி இராஜம்மாளின் ஆலோசனைகளுக்கு உடன்பட்டார். தொலைவில் புகைப்படம் எடுக்கும் ஆர்வத்தில் மகிழ்ச்சி ததும்ப வந்துகொண்டிருந்தனர் தேவதாசியர். எண்ணிக்கை அதிகமாகத் தெரிந்தது. இப்போது அங்கு ஏமி மட்டும் தான் இருந்தார். புகைப்பட கருவியை சீரமைத்துக் கொண்டு.

மற்றவர்களை எங்கே...? ஒருத்தி கேட்க... கோவிலை சுற்றிப் பார்க்க வேண்டுமாம்... போயிருக்காங்க. நீங்க வருசையாக நில்லுங்க என்ற ஏமி.. எழுந்து அவர்களை இரண்டு வரிசையாக நிறுத்தி எல்லோர் முகமும் தெரியுமளவில் நிற்க வைத்தார்.

ஆங்காங்கே மக்கள் கோவிலுக்குள் வந்தும் வெளியேறியும் கொண்டிருந்தவர்கள் இதைப் பார்க்க பெருங்கூட்டமாக கூடிவிட்டனர். வெள்ளைக்காரப் பெண் தனது கையில் புகைப்பட கருவியோடு நிற்பதையும் அவர் தமிழ் பேசும் நேர்த்தியும் அவர்களை நின்று இரசிக்க வைத்திருக்க வேண்டும். புகைப்படம் எடுப்பதை, அதுவும் ஒரு பெண் எடுப்பதை பார்ப்பது மிக அபூர்வமானதாக அவர்களுக்குத் தெரிந்தது.

ஏமி புகைப்படத்தை பலமுறை எடுத்து, எடுத்து ....அங்கிருந்த ஒட்டு மொத்த மக்களின் கவனத்தையும் தன்பக்கம் ஈர்த்துக் கொண்டிருக்க, இரவை நெருங்கி கொண்டிருந்தது வானம்.

அம்மா.. நேரம் தாழ்ந்து விட்டது... இனி கிளம்பினால் தான் முடியும் என்றான் அதுவரை காத்திருந்த வண்டியோட்டி. கண்ணட், நீங்க எப்போது வந்தீர்கள் இங்கு? என்றவர் புகைப்பட கருவியை பைக்குள் வைத்தபடியே... சரிசரி இதோ வந்து விடுகிறேன். நேரம் போனதே தெரியவில்லை. அவர்கள் எல்லோரையும் எங்கே... சுற்றும் முற்றும் பார்த்தபடி. கேட்டார் ஏமி.

அம்மா...அவர்கள் கோவிலை சுற்றிப் பார்த்துவிட்டு, அந்தப்பக்க வழியாக வெளியே வந்து.... அப்படியே நமது வண்டிக்கும் வந்துட்டாங்க.. கூட்டம் அதிகமாக இருக்கு அந்தப் பக்கம் என்றான் லேசாக தலையசைத்து. இன்றைக்கு வெள்ளிக்கிழமை அதனால் கொஞ்சம் அதிகமாகதான் ஆட்கள் நடமாட்டம் இருக்கும் என்றாள் ஒருத்தி.

சரிசரி, மிகவும் மகிழ்ச்சி. இதோ நானும் வந்துவிடுகிறேன் என்று அனைவரிடமும் விடைபெற்றுக்கொண்டார் ஏமி. அடுத்தமுறை வரும்போது படத்தை கொண்டு வந்து தருகிறேன்.

எப்போது வருவீர்கள்?

அடுத்த மாதம் இதே நாளில் இங்கு உங்களைப் பார்க்க வருகிறோம் என்ற ஏமி இனி உங்களை இந்தப் படத்தில் தான் பார்த்துக் கொள்ள முடியும் என்று அவர்களிடம் சொல்ல இயலாமல் விடை பெற்றார்.

இராஜம்மாள் மட்டும் இந்தப் படத்தில் இல்லையே என்ற சிறு கவலையோடு... எங்காவது தொலைவில் தென்படுகிறாளா என்று பார்த்தபடியே வெளியேறினார் ஏமி.

**தொடரும்..**

## திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் அன்பின் வாழ்த்துக்கள்.

பூர்வ நாட்களை நினை; தலைமுறை தலைமுறையாய்ச் சென்ற வருஷங்களைச் கவனித்துப்பார்; உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறிவிப்பான், உன் மூப்பர்களைக் கேள், அவர்கள் உனக்குச் சொல்லுவார்கள். உபாகமம் 32.7

ஒருங்கிணைந்த திருநெல்வேலி திருச்சபை உருவாகி சுமார் இரண்டரை நூற்றாண்டுகளாகின்றன. பராபரனின் பெரிதான கிருபையினால் இன்று திருமண்டலங்களாகவும், பல நூறு திருச்சபைகளாகவும் பெருகிவந்து கொண்டு இருக்கின்றது. பராபரனுக்கு ஸ்தோத்திரம். திருச்சபை சரித்திரத்தை அறிய வேண்டிய அவாவும் மக்கள் மனதில் அதிகரித்துக்கொண்டே இருக்கின்றது. இந்நிலையில் **'யார் நமது காரியமாய் போவான்,' இதோ அடியேன் இருக்கின்றேன், என்னை அனுப்பும்'** என்று ஏசாயா தீர்க்கன் முன் வந்தது போல திருநெல்வேலி வரலாற்றை மீள் பதிப்பு செய்யவும், வரலாற்று பணிகளை கள ஆய்வுப் மேற்கொள்ளவும், நின்றுபோன வரலாற்று **'தொடரோட்டத்தை தொடரவும்'** கடவுளால் தெரிந்துகொள்ளப்பட்ட இயக்கமே **'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்'**

திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்கள் பலரின் அரும்பெரும் முயற்சியினால் தொடங்கப்பட்டது. நம்முடைய வரலாற்றுச் சங்கத்தின் தரிசனத்தில், இறையியல் கல்லூரி மாணவர்கள் பலர் தன்னார்வத்தோடு தங்களையும் இணைத்து செயல்பட்டு வருகிறார்கள். மேலும் தமிழ்நாடு முழுவதும் உள்ள பல வரலாற்று ஆய்வாளர்களுடன் கைகோர்த்து இப்பணியைச் செய்து வருகின்றோம்.

வரலாற்றுச் சங்கமானது கடந்த மூன்று ஆண்டுகளாக உங்களுடைய ஜெபத்தினாலும் பேராதரவினாலும், மிகச்சிறப்பாக செயல்பட்டுக் கொண்டிருக்கின்றது. நமது பத்து அம்ச திட்டங்களில் மாத ஆய்விதழ், பழைய புத்தகங்கள் சேகரித்தல் மற்றும் டிஜிட்டல் செய்யும் பணி, புத்தக மறுப்பதிப்பு பணிகள், நூலகப் பணிகள், மிஷன் சுற்றுப்பயணம், புத்தக வனம் இணைய செயலி, ஆவணப்படம் தயாரித்தல், மிஷன் அருங்காட்சியகம், ஆய்வுக் கருத்தரங்கம் போன்ற பணிகளை கடந்த ஆண்டுகளில் செய்து வருகின்றதை நீங்கள் அறிந்ததே.

இந்த ஆண்டிலும் வரும் ஆண்டுகளிலும் நமது இலக்குகளை அதிகப்படுத்தி இருக்கின்றோம். குறிப்பாக **புத்தக மறுப்பதிப்பு, நூலகப் கட்டிட பணிகள், மிஷன் அருங்காட்சியகம்** மேற்கண்ட பணிகளை செய்ய வேண்டிய தேவையில் இருக்கின்றோம். இப்பணிகளில் நீங்கள் குடும்பமாகவோ, இயக்கமாகவோ அல்லது தனிநபராகவோ இணைந்து செயல்படவும் பங்கு பெறவும் அன்புடன் அழைக்கின்றோம்.

**நம் சங்கத்தின் பத்து அம்ச செயல்திட்டத்தை நினைவுபடுத்துகின்றோம்:-**

தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் நீண்ட இடைவெளிக்கு பின்பு மீண்டும் ஒரு வரலாறு படைத்துக் கொண்டு இருக்கும் மாத ஆய்விதழ் தான் **'கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்'**. கடந்த 2020ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தலைப்பைக் கொண்டு பல்வேறு அரிய ஆய்வுக் கட்டுரைகளோடு மிக சிறப்பாக வெளி வந்து கொண்டிருக்கிறது. **மறைக்கப்பட்ட, மறந்த, மறைந்த** மிஷனெரிகள் மற்றும் திருச்சபை வரலாறுகள், கள ஆய்வுகள், பல்வேறு அரிய வரலாற்று பொக்கிஷங்களுடன் தமிழகம் முழுவதும் தொடர்ந்து 1600 க்கு மேற்பட்ட வாசகர்களுடன் வந்து கொண்டு இருக்கின்றது.

- காலவோட்டத்தில் அறுபட்டுக்கிடந்த இசைத் தமிழ் கண்ணிகளைத் தற்கால இசைத் தமிழ் உலகுக்குக் கோர்த்துக் கொடுத்த மாபெரும் இசைத் தமிழ் அறிஞர் தஞ்சை ஆபிரகாம் பண்டிதர் அவருடைய அளப்பரிய செயல்களை நினைவுகூறும் வகையில் **ஆபிரகாம் பண்டிதர் நினைவு மின்னனு ஆராய்ச்சி நூலகம்** நம்முடைய சங்கத்தின் சார்பில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் **முதல் நூலகம்** என்ற சிறப்பைப் பெற்றது. இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல் கல்லாகவும் அமையும். மேலும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் இது உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.
- வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த, மறுபதிப்பு செய்து வெளியிடப்படாத கிறிஸ்தவ மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாறு புத்தகங்களை மறுபதிப்பு செய்து வருகின்றோம். குறிப்பாக நெல்லை திருமண்டல வரலாற்று அறிஞர் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களுடைய படைப்புகளை மறுபதிப்பு செய்து இன்றைய தலைமுறைகளுக்கு கொண்டு செல்லவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றோம். குறிப்பாக கடந்த ஆண்டு பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் அவர்களின் வரலாற்று சிறப்புமிக்க புத்தகம் அனைத்தையும் மறுபதிப்பு செய்து வருகின்றோம்.

- நம்முடைய வரலாற்று சங்கமும் கிறிஸ்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்து மையமும் இணைந்து **‘புத்தக வனம்‘** செயலி செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றது. இந்த செயலி தமிழகத்தில் முதல் முறையாக டிஜிட்டல் முறையில் கையடக்க வடிவில் புத்தகமாக முழு நூலகமாக உங்கள் கைகளில் கொடுத்துள்ளோம். இன்னும் பல ஆயிரம் புத்தகங்களை பதிவேற்றும் பணி நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. மேலும் பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் பெயரிலேயே **நினைவு புத்தக அங்காடி** ஒன்று ஏற்படுத்தப்பட்டுள்ளது.
- தமிழக வரலாற்றில் கிறிஸ்தவ மிஷனெரிகளுடைய பங்கு குறிப்பிடத்தக்கது. அந்த மிஷனெரிகள் பணி செய்த இடங்கள், அவர்களுடைய நினைவிடங்கள், தங்கியிருந்த இல்லங்கள், கல்லறைகள், வரலாற்று சிறப்புமிக்க ஆலயங்கள், இரத்த சாட்சிகளாக மரித்த மிஷனெரிகள் பணி செய்த மற்றும் தங்களை இரத்த சாட்சியாக ஒப்புக்கொடுத்த இடங்களை தெளிவான முறையில் பார்வையிடவும், வெளியிடங்களிலிருந்து வரும் மக்களின் வசதிக்காகவும் **Mission Tourist Map** என்று செயலி உருவாக்கி அதன் மூலம் அவர்கள் தங்குமிடங்கள், வழித்தடங்கள் அடங்கிய மின்னியல் கையேடு அமைப்பது.
- வரலாற்றின் பக்கங்களில் மறைந்து கிடக்கும் கீர்த்தனை கவிஞர்கள், உபதேசிமார்கள், முன்னாள் குருமார்களுடைய வரலாற்று பொக்கிஷங்களை சேகரித்து வருகிறோம். மேலும் அவர்களுடைய வரலாற்றுத் தகவல்கள், அவர்களால் உருவாக்கப்பட்ட திருச்சபைகள், கிறிஸ்தவ பாடல்கள் உருவாக்கம் பெற்ற வரலாறுகள், பாடல்களின் வரலாறுகளையும் சேகரித்து அதை மின்னியல் முறைக்கு மாற்றும் பணிகளையும் செய்து கொண்டு இருக்கின்றோம்.
- தமிழ் கிறிஸ்தவ பழைய புத்தகங்களை சேகரித்து மின்னியல் முறையில் ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகத்திலும், பேராசிரியர் அருள்திரு தே.அ. கிறிஸ்துதாஸ் ஐயர் நினைவு புத்தக அங்காடியிலும் பதிவேற்றம் செய்வதுடன் புத்தகங்களை தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் விதமாக ஒரு சிறந்த ஆய்வு நூலகம் அமைக்கவும் முயற்சிகளும் மேற்கொண்டு வருகிறோம்.
- மிஷனெரிகளின் வாழ்க்கை வரலாற்று சம்பவங்களை அடிப்படையாக கொண்டு ஆவணப்படங்களை வெளியிடுவதற்கான முயற்சிகள் செய்து கொண்டு இருக்கிறோம். கர்த்தருக்கு சித்தமானால், வருகிற ஆண்டு ஒரு மிஷனெரியின் வரலாற்றை ஆவணப்படமாக்க திட்டமிட்டிருக்கிறோம்.
- தங்களுடைய வசதியான வாழ்வை தியாகம் செய்து நம் நாட்டிற்கு வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட மிஷனெரிகள் மற்றும் தன் சொந்த மக்களுக்காக தங்களையே அர்ப்பணித்த நம் இந்திய மிஷனரிகளின் நினைவிடங்கள் மற்றும் கல்லறைகளை கண்டறிவதுடன் திருச்சபையுடன் இணைந்து பராமரித்து அவர்களுடைய தியாகங்களை குறித்த விழிப்புணர்வை திருச்சபை மக்களுக்கு ஏற்படுத்த பணியாற்றி வருகிறோம்.
- வரலாற்றுச் சங்கம் சார்பில் மிஷனெரிகள் பயன்படுத்திய கலை பொருட்கள் மற்றும் புத்தகங்கள், பைபிள், சேகரித்து வரலாற்று **அருங்காட்சியகம்** அமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். மிஷனெரிகள் பயன்படுத்திய பொருட்களை சேகரித்து வருகிறோம்.
- திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் சார்பாக வரலாற்று **ஆய்வுக் கருத்தரங்கம்** நடத்துவது வரலாற்று கள ஆய்வு பயிற்சிக்கான Workshop நடத்தும் பணிகளை மேற்கொண்டு வருகிறோம். அதற்கான ஆயத்தப்பணிகள் நடந்துகொண்டிருக்கிறது.

கிறிஸ்துவுக்குள் பிரியமானவர்களே, கடந்த 2017ம் ஆண்டு அற்பமாக ஆரம்பிக்கப்பட்ட நம்முடைய திருநெல்வேலி **கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்** இது வரையிலும் பல்வேறு தடைகளையும், நெருக்கடிகளையும் கடந்து வந்திருக்கிறது. வரலாற்று ஆய்வாளர்கள், ஆசிரியர்கள், வாசகர்கள், நண்பர்கள், நலன் விரும்பிகள் ஆகியோருடைய இடைவிடா ஜெபத்தாலும், ஆதரவாலும், உதவியாலும் நம் திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம் தொடர்ந்து செயல்பட்டு வருகிறது. மேலும் நம்முடைய மாதாந்திர ஆய்விதழும் தடைகளின்றி வெளி வருகிறது. நம்முடைய கிறிஸ்தவ வரலாற்றுச் சங்க செயல்பாடுகள் சிறப்பாக அமைய ஜெபத்தாலும், உடலுழைப்பாலும், பொருளாதார வழியிலும் உதவி வரும் அத்துணை நல்லுள்ளங்களுக்கும் நன்றியினை தெரிவித்துக் கொள்கிறோம். தொடர்ந்து நாம் செயல்பட வேண்டிய தளங்கள் அநேகமுண்டு. இணைந்து செயல்பட அன்புடன் அழைக்கிறோம். வரலாற்றுச் சங்கத்தின் ஓர் அங்கமாக வரலாற்றை அடுத்த தலைமுறைக்கு கொண்டு செல்லும் கருவியாவோம். சர்வ வல்லமை கொண்ட ஆண்டவரின் ஆயுதமாவோம்.

Return Requested:

Tamil Printed Book- For Private Cirulation Only

To

**CHRISTAVA VARALATRU SUVADUGAL**
# 2.2.3(4)North Street,
Bungalow Surandai-627859.
Tenkasi District
Tamil Nadu
Ph: 04633 290401
Mo: **91767 80001**


Owned & Published By TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY, Tamil Eduction- For Private Cirulation Only
Editor|G.MUTHAIAH SELVAKUMAR| at 2.2.3(4)North Street, Bungalow Surandai-627859. Tenkasi District Ph: 04633 290401